# கொலம்பியா ரிகார்டுகள்

கவிமணி

## தேசிகவிநாயகம் பிள்ளை

கிருதிகள்





கந்தர்வகான

**மாயவரம் S. ராஜம்**

GE-6387

சொன்னதெல்லாம் மறந்தாரோ

(கரஹரப்ரியா - 2 பாகங்கள்)

**வைக்கம் ஸரஸ்வதி**

GE.6391

யாரிவனறிவாயோடி

(ஷண்முகப்ரியா - 2 பாகங்கள்)



**ஸரஸ்வதி ஸ்டோர்ஸ், மதராஸ். 2.**

மேற்கண்ட ரிகார்டுகள் எங்களிடமும் கிடைக்கும்

மெஸர்ஸ். குப்தா கார்ப்பொரேஷன்

தபால் பெட்டி நெ. 35, 17-A/428, அருணாசல ஆச்சாரி தெரு, சேலம்

# வந்தனம்! நீங்கள் லைப்பாய் தேகாப்பியாசம் செய்தீர்களா?



ஒரு தேசமக்களின் சிறப்பு அவர்களுடைய ஆரோக்கியத்தைப் பொறுத்தே இருக்கிறது. திட ஆரோக்கியத்தைப் பெறுவதற்கான மார்க்கம் தவறாமல் தேகாப்பியாசம் செய்வதும், சரீரசுத்தத்தை கவனிப்பதும், சத்துள்ள சாதாரண உணவை உட்கொள்வதும் தான். உங்கள் தேகசுத்தத்திற்கு லைப்பாய் சோப் உபயோகியுங்கள். அதிலடங்கியுள்ள விசேஷ சுகாதாரப் பொருள் உங்கள் உடலை நோய்களிலிருந்து பாதுகாக்க உதவுகிறது.

**அப்பியாச தேகப் பயிற்சிப் படங்களுக்கு Dept. A411 P.O. Box 758, Bombay, 1 என்ற விலாசத்திற்கு இரண்டணா ஸ்டாம்பு அனுப்புங்கள்.**








## லைப்பாய் சோப்புடன் துவக்கும் நாளே நன்னாள்

L. 92-88 TM

LEVER BROTHERS (INDIA) LIMITED

# ஆனால் நிச்சயமாய் அதனுடைய விலை இதைவிட அதிகம்தான்?




... அப்படியில்லை.. கோல்டன் பிளாட்டினம்பேனா முன் இருந்த விலையான ரூ. 3-1-0க்கே கிடைக்கிறது. சரக்குக்குறைவு ஏற்பட்டிருந்தாலும், விலைவாசிகள் அதிகமாயிருந்தபோதிலும் கோல்டன் பிளாட்டினம் பேனாவின் இலக்ஷணம் எப்பொழுதும் போல உயர்வுள்ளதாகவே இருக்கிறது. ஒவ்வொரு உண்மையான பிளாட்டினம் பேனா குழலின்மேலும் நிப்பின் மேலும் பேனாவின் பெயர் செதுக்கப்பட்டிருக்கிறது— "பிளாட்டினம்" என்ற பெயர் இருக்கிறதா என்று பாருங்கள். போலிகளை வாங்காதீர்கள்

கோல்டன் பிளாட்டினம்

GOLDEN **Platignum** REGD

இங்கிலாந்தில் செய்யப்பட்டது.

சர்வ வியாபார உரிமையாளர்கள்:-
முல்லர் அன்டு பிப்ஸ் (இந்தியா) லிமிடெட்.
க்வீன்ஸ் மான்ஷென்ஸ், பாஸ்டியன் ரோடு, பம்பாய்.

# கல்கி

## பொருளடக்கம்

மலர் 7 | இதழ் 12 — அக்டோபர் 19 — சர்வசித்து ஐப்பசி 3



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனை.

"பாரதியாரின் கவிதைகள் உலகத்துக்கே பொதுவான பொக்கிஷம்" என்று கவியரசி சரோஜினி தேவி தமது வாழ்த்துரையில் கூறியுள்ளார். அத்தகைய பொக்கிஷம் போன்ற கவிதைகளைச் சாதாரண அலுமினியத் தட்டிலே எடுத்துக் கொடுக்கலாமா? சித்திர விசித்திரமான வேலைப்பாடுகள் அமைந்த தங்கத் தட்டிலே ஏந்திக் கொடுக்க வேண்டாமா? இவ்விதம் கொடுக்க வேண்டுமென்ற நோக்கத்துடனே, பாரதி பிரசுராலயத்தாரின் அனுமதியுடன், "பாரதி நினைவு மலர்" வெளியிடப்பட்டிருக்கிறது. பாரதி மண்டபத் திறப்பு விழாவை யொட்டி வெளியான இந்த அற்புத மலரில் விதவிதமான வர்ண சித்திரங்களுடனும் வேலைப்பாடுகளுடனும் பாரதியாரின் ஜீவ கவிதைகள் அச்சிடப்பட்டிருக்கின்றன. தேசிய கீதங்கள், செந்தமிழ் நாட்டுப் பாடல்கள், வேலன் பாட்டுக்கள், கண்ணன் பாட்டுக்கள், பராசக்தியின் பாமாலைகள் எல்லாம் இந்தத் தொகுதியில் இடம் பெற்றிருக்கின்றன. வழுவழுப்பான உயர்ந்த ரக ஆர்ட் காகிதம் உபயோகிக்கப்பட்டிருக்கிறது. பாரதியாரின் திருவுருவமும் பாரதி மண்டபத்தின் அழகிய தோற்றமும் அட்டையின் உள் இரு பக்கங்களை அலங்கரிக்கின்றன. விளம்பரம் கிடையவே கிடையாது.




இத்தகைய அற்புதமான பாரதி ஞாபகார்த்த மலரின் ஒரு பக்கம் தமது இந்த இதழ் அட்டையை அ[illegible]லங்கரிக்கிறது. "வில்லினை யொத்த புருவம் வளைத்தனை வே[illegible]லவா!" என்னும் பாடலின் சித்திரம். புத்தகத்தின் ஒவ்[illegible]வொரு பக்கத்திலும் இம்மாதிரி வர்ணசித்திரங்களைக் காண[illegible]லாம்.

இந்தப் புத்தக லோகிலை[illegible]யக் கண்டவர் எவரும் அதன் தெய்விக சௌந்தரியத்தில் மயங்காதிருக்க முடியாது. விலை [illegible] ரூபாய் மூன்றுதான். புத்தகத்தில் கிடைக்கும் லாபம் பாரதி மண்டப நிதியைச் சேரும். [illegible] இன்னும் சில பிரதிகளே இருக்கின்றன. மறு பதிப்புக்கு அனுமதி கிடையாது. எ[illegible]னவே, "பாரதி நினைவு மலர்" வேண்டுவோர் உடனே கல்கி காரியாலயத்துக்கு எழு[illegible]தும்படி கேட்டுக் கொள்கிறோம்.





# என்ன சேதி?

## மறைக்க முடியாது

“இத்தனை ஜனங்களும் என்னுடைய அடிமைகள்!” என்றான் மகாராஜா, கர்வத்துடன். “ஆமாம்; இத்தனை ஜனங்களும் உங்களுக்கு அடிமை; ஆனால், நீங்கள் எனக்கு அடிமை!” என்று கூறி, மகாராஜாவை ஒரு மகாகவி மட்டந் தட்டிய தாகச் சோழ மண்டல சரித்திரத்தில் ஒரு சம்பவம் உண்டு.

அதுபோல, உலகிலே ஐந்தில் இரண்டு மடங்கிருந்த பிரிட்டிஷ் சாம்ராஜ்ய நாடுக ளெல்லாம் பிரிட்டிஷ் சர்க்காருக்கும், பிரிட்டிஷ் சர்க்கார் இங்கிலாந்து பாங்கிக்கும் அடங்கிக் கிடந்த காலம் உண்டு. முதலாளிகளின் ஆதிக்கம் நிறைந்த இங்கிலாந்து பாங்கியின் தயவின்றி பிரிட்டிஷ் தொழிற் கட்சி சர்க்கார் வீழ்ச்சி யடைந்திருக்கிறார்கள். இனியும் அவ்வாறு நேரா மல் தடுப்பதற்காகவே, அட்லி சர்க்கார் அதிகாரத்தை ஏற்றுக் கொண்டவுடன் முதன் முதலாக இங்கிலாந்து பாங்கியின் பல்லைப் பிடுங்கினர். அதாவது அந்த பாங்கி நிர்வாகிகளின் விஷமத்துக்குச் சிறிதும் இடம் கொடுக்காமலிருப்பதற்காக

நிகழ்ந்த மகா யுத்தம்தான் காரணமே யன்றி, தொழிற்கட்சி சர்க்கார் காரண மல்ல வென்பதை கன்சர்வேடிவ் கட்சியின் கெட்டிக்காரத்தனமான பிரசாரமோ, அல்லது சர்ச்சிலின் வாய் வீச்சோ மறைத்துவிட முடியாது. பிரிட்டிஷ் அரசியலில் கன்சர்வேடிவ் கட்சியால் ஏற்பட்ட விளைவையே இப்போது தொழிற் கட்சி சர்க்கார் சீர்திருத்த நேர்ந்திருக்கிறது.

## வீண் ஆசை

முதலாவது மகா யுத்தத்தின்போது பிரிட்டிஷ் பிரதம மந்திரியாக இருந்த லாயிட் ஜார்ஜின் லிபரல் கட்சி அதன்பின் தலை தூக்கவே முடியவில்லை. இரண்டாவது மகா யுத்தத்தின்போது பிரிட்டிஷ் பிரதம மந்திரியாக இருந்த ஸ்ரீ சர்ச்சிலின் கன்சர்வேடிவ் கட்சிக்கும் அதே கதி நேர்ந்து விடாமல் இருப்பதற்காகவே, சமீபத்தில் நிகழ்ந்த மேற்படி கட்சியினர் மகாநாட்டில், பிரசாரத்துக்காகப் பத்து லட்சம் பவுன் செலவழிப்பதென்று தீர்மானித்திருக்கிறார்கள்.

சென்ற பொதுத் தேர்தலில் பிரிட்டிஷ் தொழிற் கட்சி

ஐயையோ! இவ்வளவு தானா? இந்த வாத்து தங்க முட்டை யிடும் என்றல்லவா நினைத்தோம். ஒன்றையும் காணோமே!

பாகிஸ்தான்

பாகிஸ்தான் சர்க்காரின் பண நெருக்கடி நாளுக்கு நாள் அதிகமாகி வருகிறது.
- பத்திரிகைச் செய்தி

திடீரென்று முடிவடைந்த போட்டிப் பந்தயம்!

மைசூர் காங்கிரஸ்

# பிரசாரப் போர்

தந்தையும் மகனும் சந்தையில் ஒரு குதிரை வாங்கிக் கொண்டு சென்றார்கள். சிறு பையன் ஆனதால் மகனுக்கு அதிக தூரம் நடக்க முடியவில்லை. எனவே, தந்தை அவனைக் குதிரைமீது ஏற்றிச் சென்றார்.

பிறரை வஞ்சித்து 'வெற்றி' பெறுவதையே தங்களுடைய வாழ்க்கையின் லட்சியமாகக் கொண்ட சில பேர்வழிகள் ஒரு குயுக்தி செய்தனர். சிறிது தூரத்துக்கு ஒருவராக நின்று கொண்டு, 'ஐயோ, பாவம்! இந்தச் சிறுவனை இப்படிக் கழுதையின் மீதேற்றிச் செல்வது நியாயமா?' என்று அனுதாபம் ததும்பும் குரலில் கேட்டனர்.

முதலாவது பேர்வழி கேட்டதை சிறுவனின் தந்தை லட்சியம் செய்யவில்லை.

ஆனால், சிறிது தூரம் சென்ற பின் இரண்டாவது நபரும் அவ்வாறே கேட்டதும் தந்தைக்குச் சந்தேகம் ஏற்பட்டு விட்டது. ஆழ்ந்த யோசனையுடன் அவர் தடுமாறிக் கொண்டே மேலே நடந்து சென்றார்.

கொஞ்ச தூரம் சென்ற பின் மூன்றாவது ஆசாமி மிகவும் ஆச்சரியத்தில் ஆழ்ந்தவன் போல், 'இதென்ன வேடிக்கையாக இருக்கிறதே, ஒரு தந்தை தன் பிள்ளையையே கழுதை மீது ஏற்றிக் கொண்டு செல்வது விந்தையிலும் விந்தையல்லவா?' என்று சொல்லி ஏளனமாகச் சிரித்தான்.

அவ்வளவுதான்; அவர்களின் பிரசார சாமர்த்தியத்தினால் குதிரையும் 'கழுதை'யாகி விட்டது!

தந்தைக்கும் மகனுக்கும் தூக்கி வாரிப் போட்டது. 'பேயோ, பிசாசோ தங்கள் கண்களுக்குக் குதிரை போலவும் பிறருடைய கண்களுக்குக் கழுதை போலவும் தோன்றுகிறது!' என்று பீதியடைந்து அவ்விருவரும் குதிரையை நடு வழியிலேயே விட்டு விட்டு ஓடிவிட்டனர்.

அவ்வாறு வெகு சுலபமாக மேலே குறிப்பிட்ட வஞ்சகர்களுக்கு ஒரு நல்ல குதிரை கிடைத்து விட்டது!

* * *

சமீப காலமாக நமது நாட்டில் நிகழ்ந்து வரும் சம்பவங்கள் மேற்படி கதையையே ஞாபக மூட்டுகின்றன.

பாகிஸ்தான் ஏற்பட்டு விட்டால் பாரத நாடெங்கும் பாலும் தேனும் வழிந்தோடு மென்று லீக் தலைவர்கள் பிரசாரம் செய்தார்கள். பாகிஸ்தான் ஏற்படாததே, நவகாளியில் நிகழ்ந்த படுகொலைகளுக்குக் காரணமென்றும் கூறினார்கள்.

ஆனால், பாகிஸ்தான் ஏற்பட்ட பின்னரும் படுகொலைகள் நிற்கவில்லை. நவகாளி நிகழ்ச்சிகளைக் காட்டிலும் நூறு மடங்கு அதிக பயங்கரமான சம்பவங்கள் பாகிஸ்தான் ஏற்பட்ட பின் பாகிஸ்தானிலே, பாகிஸ்தான் அதிகாரிகளின் முன்னிலையிலே நடைபெற்றிருக்கின்றன.

அங்கு இது வரையில் நிகழ்ந்துள்ள சம்பவங்களைப் பற்றிக் கூறவும் வாய் கூசுகின்றது; எழுதவும் கை நடுங்குகின்றது.

பாகிஸ்தான் நிகழ்ச்சிகளை லீக் தலைவர்கள் தங்களுடைய பிரசார சாமர்த்தியத்தினாலும், செய்திகள் இருட்டடிப்பினாலும் பல நாட்கள் வரையில் மறைத்து வந்தார்கள்.

எனினும், பாகிஸ்தானைச் சேர்ந்த மேற்கு பஞ்சாபிலிருந்து லட்சக் கணக்கில் வந்த அகதிகளின் மூலம் தான் சகல விவரங்களும் தெரிய ஆரம்பித்தன.

வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தில் என்ன நடக்கிறது என்பது பற்றி

இன்னும் கூட ஒரு செய்தியும் தெரியவில்லை. அம்மாகாணத்திலுள்ளவர்கள் இந்தியாவிலுள்ள தங்கள் உறவினருக்குத் தந்தி கொடுப்பதோ அல்லது கடிதம் எழுதுவதோ கூட சாத்தியமில்லையென்றால், அங்கு நடந்துவரும் ஆட்சி முறையைப் பற்றி ஒருவாறு கற்பனை செய்து கொள்ளலாம்!

பாகிஸ்தானில் நிகழ்ந்து வரும் உண்மையான சம்பவங்களைப் பற்றி இந்தியாவே அறிந்து கொள்ள முடியவில்லையென்றால், உலக நாடுகள் அறிந்து கொள்வதெப்படி?

பாகிஸ்தான் சர்க்கார் தலைவர்களுடைய அறிக்கைகளோவெனில், பொய்ப் பிரசாரக் 'கலை'யின் சிகரத்தை எட்டி வருகின்றன. எனவே, அவற்றை ஆதாரமாகக் கொண்டு உலக நாடுகள் ஒரு முடிவுக்கு வருமாயின், அம் முடிவு எவ்வளவு விபரீதமானதாக இருக்குமென்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

* * *

ஏனினும், பலரைச் சிறிது காலம் ஏமாற்றலாம். சிலரை வெகுகாலம் ஏமாற்றலாம். ஆனால், எல்லோரையும் எப்போதும் ஏமாற்றி வர முடியாதல்லவா?

அதற்கிணங்க, பாகிஸ்தான் சர்க்கார் தொடுத்துள்ள பொய்ப் பிரசாரப் போரின் தன்மையை இப்போது உலக நாடுகளும் அறிந்து கொண்டு வருகின்றன.

இந்தியாவில் முஸ்லிம்கள் படுகொலை செய்யப்படுவதாகவும், அவ்விஷயத்தை விசாரித்து தங்களுக்கு நியாயம் வழங்க வேண்டுமென்றும், பிரிட்டனையும் இதர டொமினியன் நாடுகளையும் பாகிஸ்தான் சர்க்கார் கேட்டுக் கொண்டிருந்தன ரல்லவா? அவர்களுடைய கோரிக்கைக்கு மேற்படி நாடுகள் மழுப்பலாகப் பதிலளித்து விட்டன.

எனவே, இந்தியாவில் படுகொலைகளை ஆரம்பித்தது பாகிஸ்தான் தலைவர்கள்தான் என்பதை அந்த நாடுகள் ஓரளவு அறிந்து கொண்டிருக்கின்றனவென்பதும், பாகிஸ்தான் சர்க்காரின் கலப்பற்ற பொய்ப் பிரசாரம் உண்மையை மறைத்துவிட முடியவில்லையென்பதும் நன்கு தெரிகிறது.

மற்றும் அன்பையும் அஹிம்சையையுமே தங்களுடைய ஆயுதங்களாகக் கொண்ட உயர்தர காங்கிரஸ் தலைவர்களடங்கிய இந்திய அரசாங்கம், ஒரு காலத்திலும் படுகொலைப் பாதகத்தில் இறங்காதென்பதைக்கூட தெரிந்து கொள்ள முடியாத துர்ப்பாக்கிய நிலையில் உலக நாடுகள் இல்லை.

இந்தியாவிலுள்ள முஸ்லிம்களின் பாதுகாப்புக்காக தமது உயிரையும் விடத் தயாராயிருந்த மகான் காந்தியின் அற்புத வெற்றியும், சிறுபான்மையோருக்குப் பூரண பாதுகாப்பளிப்பதுடன், அவர்களுக்குச் சகல பிரஜா உரிமைகளும் உண்டென்று கூறி, செய்கையிலும் அதை நிறைவேற்றி வரும் சர்வ தேசிய வாதியும் இணையற்ற தலைவருமான ஜவாஹர்லால்ஜியின் மகிமையும், உலகம் முழுதும் உணர்ச்சிப் பெருக்கை உண்டு பண்ணியிருக்கின்றன வென்று கூறுவது மிகையாகாது.

தவிர, இந்தியாவில் பெரும்பாலான மாகாணங்களிலும் முஸ்லிம்கள் யாதொரு கஷ்டமுமின்றி அமைதியாக வாழ்ந்து வருகிறார்கள் என்பதையும் பாகிஸ்தான் சர்க்காரால் மறைக்க முடியவில்லை.

சென்னை மாகாணத்தில் முஸ்லிம்களுக்கும் மற்றவர்களுக்கும் சகோதர பாவமே நிலவி வருகிறது. இங்கு முஸ்லிம்களின் உயிருக்கோ, உடைமைக்கோ அணுவளவும் ஆபத்து ஏற்படவில்லை.

பம்பாய் மாகாணத்திலும் நிலைமை அமைதியாகவே இருந்து வருகிறது. அங்கிருந்து முஸ்லிம்கள் சொத்து சுதந்திரம் எல்லாவற்றையும் விட்டுவிட்டு நிர்க்கதியாக வெளியே ஓடும்படி நேரவில்லை.

மத்திய மாகாணத்தில் முஸ்லிம்கள் அமைதியாகவே வாழ்ந்து வருகிறார்கள். அங்கும் ஜனங்களோ சர்க்காரோ முஸ்லிம்களுக்கு இம்மியும் கஷ்டம் கொடுக்கவில்லை.

ஐக்கிய மாகாணத்திலும் முஸ்லிம்களுக்கு யாதொரு தீங்கும் நேராதென்று சர்க்காரால் அபயமளிக்கப்பட்டிருப்பதுடன், சர்க்காரின் உறுதிமொழி செய்கையிலும் நிறைவேற்றப்பட்டிருக்கிறது.

பீஹார் மாகாணத்திலும் இப்போது நிலைமை முற்றிலும் அமைதியாக இருந்து வருகிறது.

பீஹாரில் முன்பும், கிழக்கு பஞ்சாப், டில்லி, கல்கத்தா இம்மூன்று இடங்களில் சமீபத்திலும் ஏற்பட்ட கொந்தளிப்பு, பாகிஸ்தானில் நிகழ்ந்த சகிக்க முடியாத அட்டூழியங்களுக்குப் பிரதியாக நிகழ்ந்ததே யன்றி, வேறெதுவுமில்லை.

அந்தக் கலகங்களையும் நமது மாபெருந் தலைவர்கள் வெகு சீக்கிரத்தில் அடக்கி, அமைதி நிலவும்படி செய்து விட்டார்கள்.

நெஞ்சைப் பிளக்கும் கோரச் சம்பவங்கள் நிகழ்ந்த பாகிஸ்தான் பிரதேசத்திலிருந்துவரும் அகதிகளைக் கண்டு ஆவேசம் கொண்ட கிழக்கு பஞ்சாப்பிலும், மேற்கு வங்காளத்திலும் கூட இப்போது அமைதி நிலை ஆரம்பித்திருக்கிறது.

ஆனால், பாகிஸ்தானில் நிலைமை எவ்வாறு இருந்து வருகிறது?

பலூச்சிஸ்தான், சிந்து, மேற்கு பஞ்சாப் முதலிய விடங்களிலிருந்து லட்சக் கணக்கான ஜனங்கள் உற்றாரையும் உறவினரையும் கோடிக் கணக்கில் சொத்துக்களையும் இழந்து, அரையிலுள்ள கந்தைகளைத் தவிர வேறெவ்வித உடைமையுமின்றி இந்தியாவுக்கு வந்திருப்பதே, பாகிஸ்தான் ஆட்சி முறையை விளக்கப் போதுமானது.

இந்நிலைமையில், பாகிஸ்தான் தலைவர்களின் ஒருதலைப் பட்சமான பிரசாரம் எல்லோரையும் எப்போதும் ஏமாற்ற முடியாமல் படுதோல்வியடைந்ததில் ஆச்சரியம் எதுவுமில்லை.

* * *

அதனால்தான், இனி உண்மையை மறைப்பதால் பலனில்லை யென்று நேர்ந்து காயிதே ஆஜம் முதல் பல தலைவர்களும், சிறுபான்மையோர் சம்பந்தமாக தங்களுடைய நீண்ட கால மௌன வேஷத்தைக் கலைத்துவிட்டு, பாகிஸ்தான் வெட்கித் தலை குனியும்படியான காரியத்தை முஸ்லிம்கள் செய்து விட்டார்களென்றும், சிறுபான்மையோருக்குப் பாதுகாப்பளிப்பதே தங்களுடைய முக்கிய கடமையென்றும், சிறுபான்மையோர் பாகிஸ்தானை விட்டு வெளியேறிச் செல்ல வேண்டாமென்றும் கதற ஆரம்பித்திருக்கிறார்கள்.

அதே சமயம், பாகிஸ்தான் அட்டூழியங்களை இந்தியாவிலுள்ள முஸ்லிம் தலைவர்களும் கண்டிக்க முற்பட்டிருப்பது வரவேற்கத் தக்கதாகும்.

இந்தியாவிலுள்ள முஸ்லிம்கள் ஒன்று பாகிஸ்தானுக்குப் போய்விட வேண்டும், இல்லாவிடில் இந்திய சர்க்காருக்குத் துரோகம் நினைக்காமல் அவர்களுடன் ஒத்துழைக்க வேண்டும் என்பதை மேற்படி முஸ்லிம் தலைவர்கள் தெளிவாக எடுத்துக் கூறியிருக்கிறார்கள்.

பாகிஸ்தானை ஆதரித்தது பெருந் தவறு என்பதையும், அதனால் நாட்டுக்கே மகத்தான தீங்கு நேர்ந்திருக்கிறதென்பதையும் முஸ்லிம் லீக் தலைவர்களில் கூட பலரும் பட்டவர்த்தனமாக ஒப்புக்கொண்டிருக்கிறார்கள்.

ஜாதி, மதபேதம் எதுவுமின்றி இந்தியாவிலுள்ள சிறுபான்மையோர் சகலருக்கும் பாதுகாப்பளிக்க இந்திய சர்க்கார் உறுதி கொண்டிருக்கின்றனர். அவர்கள் அவ்வுறுதியைச் செய்கையிலும் நிறைவேற்றி யிருக்கிறார்கள்.

அதுபோல் பாகிஸ்தான் சர்க்காரும், இறுதியில் எவ்வித பலனையும் அளிக்க முடியாத பிரசாரப் போரை விட்டுவிட்டு, சிறுபான்மையோருக்கு அந்தரங்க சுத்தியுடன் பாதுகாப்பளிக்க முற்படுவார்களாயின், இந்தியாவை மாத்திரமல்ல, பாகிஸ்தானையும் திணற வைத்துள்ள பல பிரச்னைகளும் தீர வழி ஏற்படும்.

இந்தியாவும் பாகிஸ்தானும் மீண்டும் ஒன்று சேர்ந்தாலும் சேராவிட்டாலும், இரு சர்க்காரின் பெருமையும், இரு பிரதேசங்களின் க்ஷேமமும் சுபிட்சமும், ஆங்காங்குள்ள சிறுபான்மையோருக்குப் பாதுகாப்பளிப்பதையே பொறுத்திருக்கிறது.

இந்த உண்மையை இந்திய சர்க்காரும், இந்தியாவிலுள்ள பெரும்பான்மையோரும் உணர்ந்து கொண்டிருக்கிறார்கள்.

ஆனால், பாகிஸ்தான் சர்க்காரும் பாகிஸ்தானிலுள்ள பெரும்பான்மையோரும் இப்போதாவது உணர்ந்து கொண்டிருக்கிறார்களா?

# அடுத்த எதிரி!


"இந்தியாவில் ஏற்பட்ட கலகங்களை ஒருவாறு சமாளித்திருக்கிறோம் ஆனால், அவற்றைக் காட்டிலும் அதிக பயங்கர விரோதியான பொருளாதார நெருக்கடியை இனிமேல் சமாளித்தாக வேண்டும்"
— பண்டித ஜவாஹர்லால் நேரு
இந்தியா
வகுப்புக் கலகம்
SHASTRY

# பாரதி மண்டப விழா

## சித்திர மலர்

எட்டயபுரத்தில் மகாகவி பாரதியார் மண்டபத் திறப்பு விழாவுக்குப் பூர்வாங்கமாக, அக்டோபர்மீ 11வ. சனிக்கிழமை பாரதியார் பிறந்த இல்லத்தில் தேசியக் கொடி உயர்த்தப்பட்டது. சென்னை எழுத்தாளர் சங்கத் தலைவர் ஸ்ரீ எம். பி. பெரியசாமி (தூரன்) கொடி உயர்த்திமிக உருக்கமான ஒரு பிரசங்கம் செய்த பிறகு, பாரதியாரின் தாய் மாமன் ஸ்ரீ சாம்பசிவ அய்யர் "தாயின் மணிக் கொடி" கீதத்தைப் பரவசமாகப் பாடினர்.




அதே தினத்தில் மேற்கு வங்காள
கவர்னர் ஸ்ரீ சக்கரவர்த்தி ராஜகோபா
லாச்சாரியார், கவியரசர் ஞாபகார்த்த
மண்டபத்தைத் திறந்து வைப்பதற்காக
ஆயிரம் மைல் ஆகாய விமானத்திலே
பறந்து வந்து சென்னை விமான
நிலையத்தில் இறங்கினார்.

கவிச்சக்கரவர்த்தி பிறந்த எட்டயபுரத்துக்கு ஸ்ரீ சக்கரவர்த்தி ராஜகோபாலச்சாரியாரையும் பிரதம மந்திரி ஓமந்தூர் ரெட்டியாரையும் மற்றும் தமிழ் மந்திரிகளையும் பல தமிழ் அன்பர்களையும் பிரமுகர்களையும் பத்திரிகையாளர்களையும் ஏற்றிக் கொண்டு பாரதி ஸ்பெஷல் புறப்பட்டது.





வழியில் செங்கற்பட்டு, விழுப்புரம், திருச்சி, திண்டுக்கல், கோடைக் கானல், மதுரை, விருதுநகர் முதலிய ஸ்டேஷன்களில் ஆயிரக்கணக் கான தமிழ்மக்கள் கூடியிருந்து தமிழ் நாட்டின் தவப் புதல்வரைக் கண்டு களித்து ஆரவாரித்தனர். விருதுநகர் ஸ்டேஷனில் ராஜாஜி ரயிலிலிருந்து இறங்கி வந்து மகா ஜனங்களைப் பார்த்து மகிழ்ந்தார்.

★

பாரதி விழா வரவேற்புக் கமிட்டியினர் கோவில்பட்டி ஸ்டேஷனில் தலைவர்களை விமரிசையாக வரவேற்று அழைத்துச் சென்றனர்.



★

ராஜாஜி எட்டயபுரம் வந்து சேர்ந்ததும் எட்டயபுரம் சமஸ்தான மகாராஜா மாலை சூட்டி வரவேற்றார்.

★

அரண்மனை வாசலில் மற்ற மந்திரிமார்களுக்கும் தலைவர்களுக்கும் சிறப்பாக வரவேற்பு அளிக்கப் பட்டது.

★

அக்டோபர் 12உ ஞாயிற்றுக்கிழமை மத்தியானம் இரண்டு மணியிலிருந்து மகாஜனங்கள் திமுதிமு வென்று திருவிழாப் பந்தலுக்குள் வந்து குவிய ஆரம்பித்து விட்டார்கள்.



இதோ, தலைவர்களும் ஜாகையை விட்டுக் கிளம்பி விரைந்து வருகிறார்கள்.



★ ★

பிற்பகல் மூன்றுமணிக்குக் குழிக்கரை ஸ்ரீ பிச்சயப்பப் பிள்ளை அவர்களின் நாதஸ்வரக் கச்சேரி ஆரம்பமாயிற்று. நாதஸ்வர வித்வான்கள் இன்னிசையைப் பொழிந்தார்கள். தவுல் வித்வான்கள் திருவிழாப் பந்தலையும் பாரதி மண்டபத்தையும் கிடுகிடுக்கச் செய்தார்கள்.

★ ★

சுமார் ஐந்து மணிக்கு ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி விழா மேடைக்கு வந்து சபையோருக்கு வணக்கம் செலுத்தி விட்டுக் கச்சேரியைத் தொடங்கினர்.

★ ★



கான ரத்ன சௌடய்யாவின் பிடில், கல்பாத்தி ராமநாதன் மிருதங்கம், ஆலங்குடி ராமச்சந்திரன் கடம், நடராஜசுந்தரம் பிள்ளை கஞ்சிரா ஆகிய பக்க வாத்தியங்களுடன் மூன்று மணி நேரம் கச்சேரி அமோகமாய் நடைபெற்றது. முப்பதினாயிரம் பேருக்கும் போடப்பட்டிருந்த பந்தலில் ஐம்பதினாயிரம் மகா ஜனங்கள் கூடியிருந்து அசௌகர்யங்களைப் பொருட்படுத்தாமல் மெய்ம் மறந்து கேட்டுக் களித்தனர்.



இரவு பத்து மணிக்கு மேல் இசையரசு ஸ்ரீ எம். எம். தண்டபாணி தேசிகரின் இசைக் கச்சேரி சிறப்பாக நடந்தது. ஸ்ரீ கோவிந்தசாமி நாயக்கர் வயலினும், ஸ்ரீ எஸ். வி. நாராயணன் மிருதங்கமும் வாசித்தார்கள். சபையில் கூடியிருந்த மாபெரும் கூட்டத்தார் எல்லாப் பாடல்களையும் ரஸித்து மகிழ்ந்ததோடு, ''பாட்டுக்கொரு புலவன் பாரதியடா!'' என்ற பாட்டை அபாரமாய் அனுபவித்துக் குதூகலித்தார்கள்.




# கம்பர் தரும் காட்சி

• • •

## 191. மானுடம் வென்றதம்மா!

ராமனது உருவம் சுக்ரீவனது கண்ணுக்குத் திடீரென்று தென்பட்டது.

அடுத்த நிமிஷமே லக்ஷ்மணனது உருவமும் கண்ணில் பட்டது.

கண்கள் பாடு என்ன ஆயிற்று?

ஒரேயடியாய்க் கண் பூத்துப் போகும் வண்ணம் பார்த்துக் கொண்டே இருந்து விட்டன.

கால்களும் மேலே பெயர முடியாமல் அப்படியே நின்று விட்டன.

தனக்குள்ளே சொல்லிக் கொள்ளுகிறான் அவன்.

"ஆதி அந்தமில்லாத பிரமன் எத்தனையோ உலகங்களைப் படைத்திருக்கிறான். அந்த உலகங்களில் நெடுகிலும், எத்தனையோ உத்தம ஆன்மாக்கள், எத்தனையோ புண்ணியங்களை ஆங்காங்கு செய்திருக்கின்றனர். இல்லை என்று சொல்ல முடியுமா?"

நோக்கினன் நெடிது ;நின் றான் ;—
'நொடிவரும் கமலத்தண் ணல்
ஆக்கிய உலகம்எல் லாம்
அன்றுதொட் டின்றுகா றும்
பாக்கியம் புரிந்தஎல் லாம்
குவிந்(து)இரு படிவம்ஆ கி,
மேக்குயர் தடந்தோள்பெற் று,
வீரராய் விளைந்த' என் பான்.

[நோக்கினன் நெடிது: ஈடுபட்டு நெடு நேரம் பார்த்துக்கொண்டே இருந்தான் சுக்ரீவன்; நின்றான்: அப்படியே நின்று விட்டான்; நொடி வரும் கமலத்து அண்ணல்: அழியாத் தன்மை பெற்றுள்ள பிரமன்; ஆக்கிய உலகமெல்லாம்: படைத்த உலகங்களிலே; பாக்கியம் புரிந்த எல்லாம்: செய்துள்ள புண்ணியங்கள் எல்லாம்; குவிந்து இரு படிவம் ஆகி: இரண்டு உருவமாகி; மேக்கு உயர் தடந்தோள் பெற்று: மேலே ஓங்கும் தோள்களையும் பெற்று; வீரராய் விளைந்த: இந்த இரண்டு வீரராய் உருவெடுத்தன; என்பான்: புண்ணியங்கள் எல்லாம் சேர்ந்து, ராம லக்ஷ்மணராய் உருவெடுத்தன என்று அதிசயிக்கிறான்!]

முதலில் ராமனைக் கண்டான். பிறகு லக்ஷ்மணனையும் சேர்த்து ஒரே பார்வையாய்ப் பார்த்து அதிசயிக்கிறான். இனி அவன் தெளிகிற காரியம்!

தேறினன் ;—'அமரர்க்கெல் லாம்
தேவராம் தேவர்அன் றே
மாறிஇப் பிறப்பில்வந் தார்
மானுட ராகிமன் றோ!
ஆறுகொள் சடிலத்தா னும்
அயனும்என்(று) இவர்களா தி
வேறுள குழுவைஎல் லாம்
மானுடம் வென்றதம் மா!'

[தேறினன்: நிச்சயம் பண்ணி விட்டான்; அமரர்க்கு எல்லாம் தேவராம் தேவர் அன்றே: வானுலகத்திலுள்ள தேவர்களுக்கு எல்லாம் தேவர் என்று கருதக் கூடியவர்கள் தாமே; மாறி இப்பிறப்பில் வந்தார் மானுடராகி மன்றோ: தேவலோகத்தை விட்டு மனுஷ உருவம் எடுத்து வந்திருக்கிறார்கள்; மன்றோ: நன்றாக, சந்தேகத்துக்கு இடமில்லாதபடி; ஆறுகொள் சடிலத்தானும்: கங்கையைத் தலையில் அணிந்த சிவபெருமானும்; அயனும் என்று இவர்கள் ஆதி: பிரம்மா என்று சொல்லப்படுகிறவர்கள் முதலான; வேறுள குழுவை எல்லாம்: மனுஷ வர்க்கத்தினின்று பிரிந்து நிற்கிற கூட்டங்களை வென்

# வீரசுதந்திரம்

ஸோமாஸ்

அந்த இருளில் அந்த உருவத்தைக் கண்டதும் நடேசனுக்கு உடம்பு முழுவதும் வியர்த்து விட்டது. இருதயம் படபடவென்று அடித்துக் கொண்டது. சின்ன வயதில் அவன் பாட்டியிடம் கேட்ட பேய்க் கதைகள் எல்லாம் ஞாபகத்துக்கு வந்து அவனைப் பயமுறுத்தின.

இருந்தாலும் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, கண்ணைக் கெட்டியாக மூடிக்கொண்டு, "யார் அது?" என்று கேட்டான்.

"நான்தான்!" என்ற குரல் ஆணித்தரமாக வந்தது.

"நான்தான் என்றால் யார்?"

"நான் வெளியூர். இங்கே இந்தத் திண்ணையில் படுத்து இராப் போதைக் கழிக்கலாமென்று பார்க்கிறேன். உங்களுக்கு அதில் தொந்தரவு ஒன்றும் இல்லையே?"

புதிய ஆசாமியின் இவ்வாசகங்கள், அவர் மனிதர்தான், பேய் அல்ல என்பதை நடேசனுக்குத் தெளிவாய் எடுத்துக் காட்டியிருக்க வேண்டும்.

இல்லா விட்டால், நடேசன் அவ்வளவு தெளிவான, நடுக்கமற்ற குரலில், "ஆகா, தாராளமாய்ப் படுத்துக் கொள்ளுங்கள்!" என்று கூறியிருக்க மாட்டான்.

"உங்களுக்கு எந்த ஊரோ?"

"திருவாரூர்!"

"சாப்பாடெல்லாம் ஆகிவிட்டதா?"

"அதெல்லாம் ஒன்றும் கிடையாது. நான் அதை எதிர்பார்ப்பதும் கிடையாது!"

இந்த வாக்கியத்தைச் சொல்லி முடிக்கும் போது திருவாரூர்க்காரரின் குரலில், ஒரு பக்தமணியின் குரலில் காணும் உருக்கமும் நடுக்கமும் பொங்கித் ததும்பின.

அதைக் கேட்ட நடேசனின் மனம் உலைவிட்ட இருப்புத்தூர் பருப்பைப் போல் குழைந்தது.

"அதென்ன, எல்லாவற்றின் மீதும் உங்களுக்கு விரக்தி ஏற்பட்டுவிட்டதா? எல்லாவற்றையும் வெறுத்துத் துறவு பூணும் அளவுக்கு உங்களுக்கு வயதானதாகவும் தோன்றவில்லையே?" என்று கனிந்த குரலில் கேட்டான் நடேசன்.

"இல்லை, இல்லை. எனக்கு வயது ஆகவில்லை. ஆனால் மனிதனுக்குச் சுதந்திர உணர்ச்சி பிறந்து விட்டால், அப்புறம் அவனுக்கு எதுவும் அவசியம் இல்லையல்லவா?"

"சுதந்திரமா! அப்படியென்றால்?"

"குடும்பக் கஷ்டத்திலிருந்து நான் சுதந்திரம் அடைந்து விட்டேன். இப்பொழுது தெரிகிறதா?"

"ஓகோ! குடும்பத்தில் ஏதாவது...!"

"குடும்பத்தி லிருந்துதானே எல்லாக் கஷ்டங்களும் வருகின்றன?"

"குடும்பம் என்றால் அப்படித்தான். கஷ்டம், சுகம் எல்லாம்......"

"கலந்துதான் இருக்கும். நான் அதை ஒப்புக்கொள்கிறேன். நாம் அதை யெல்லாம் அநுசரித்துக் கொண்டு போக வேண்டும் என்பதையும் ஒப்புக் கொள்ளுகிறேன். ஆனால் வீட்டில் உள்ளவர்களும் அநுசரித்துக் கொண்டு போக வேண்டும் அல்லவா?"

"சரி, உமது மனைவி அநுசரித்துக் கொண்டு போகவில்லை யாக்கும்!"

"ஆமாம், அது மாத்திரமில்லை. என் மனைவியின் சித்தி ஒருத்தி — கணவனை இழந்தவள் — வீட்டுக்கு வந்து நாலு வருஷமாகிறது."

"வீட்டில் அந்த அம்மாள் வைத்ததுதான் சட்டமாக்கும்!"

"சட்டமா! அந்த அம்மாள் பேச்சுக்கு யாரும் மறு வார்த்தை பேச முடியாது. வீட்டுச் செலவு வரவர அதிகமாகிக்


ஸ்ரீமான் நடேசன்



திருவாரூர்க்காரர்!

கொண்டே வந்தது. மூன்று குழந்தைகள், நான், என் மனைவி, அவள் சித்தி இத்தனை பேரும் என் அறுபது ரூபாய் சம்பளத்தில் குடித்தனம் பண்ண முடியுமா? நான் இதை எடுத்துச் சொல்லப் போகத்தான்......!"

"சண்டை வந்து விட்டது! இல்லையா?"

"சண்டையா! பெரிய யுத்த காண்டம் என்று சொல்லும். 'இந்த ரேஷன் காலத்தில் உன் சித்தியும் ஏன் இங்கே யிருந்து கஷ்டப்பட வேண்டும்? அவள் புக்ககத்துப் பேரிடம் போய்க் கொஞ்ச நாளைக்கு இருக்கட்டுமே!' என்றேன். அவ்வளவுதான்; என் மனைவிக்கு வந்து விட்டது கோபம். 'அவளைப் போகச் சொல்லுவானேன்? நானும் என் அண்ணாவிடம் போகிறேன்!' என்று கூறிச் சுதந்திரப் பிரகடனம் செய்தாள். இதைக் கேட்ட அவள் சித்தி சுதந்திர முரசு முழக்கினாள் — தான் வெளியேறி விடுவதாக. உடனே என் சுதந்திர உணர்ச்சி கட்டுக் கடங்காமல் பெருகி விட்டது......!"

"வீட்டை விட்டுச் சுதந்திரமாகக் கிளம்பி விட்டீர்களாக்கும்!"

"ஆமாம், 'வீர சுதந்திரம் வேண்டி நின்றார் பின்னர் வேறொன்று கொள்வாரோ?' என்னும் பாடல் உமக்குத் தெரியுமல்லவா? இனிமேல் வீட்டுப் பக்கம் கால் எடுத்து வைக்கிறதில்லை யென்று......!"

நடேசனுக்குச் சிரிப்பு வந்துவிட்டது.

"ஸார்! நீங்கள் செய்த காரியத்தை நான் சரியென்று ஒப்புக்கொள்ள மாட்டேன். இதெல்லாம் கிரகஸ்தாசிரமத்தை நடத்துகிறவர்கள் செய்யக்கூடிய காரியமா? இல்லை, கேட்கிறேன். குடும்பச் சண்டை ஏற்படுவது எங்கும் சகஜந்தான். அதைச் சமாளிக்க முடியாமல் வீர சுதந்திரம் பெற்று விட்டதாகச் சொல்லுகிறீரே, இது சுதந்திரமா? நீங்கள் என்ன உத்தியோகத்திலிருக்கிறீர்கள்?" என்று நடேசன் கேட்டான்.

"நான் பள்ளிக்கூட உபாத்தியாயர்! இப்பொழுது கோடை விடுமுறையல்லவா?"

"சரிதான், சரிதான்! என்னமோ எல்லாவற்றையும் வெறுத்து விரக்தி படைத்து வீட்டை விட்டுச் சுதந்திரமாகக் கிளம்பிவிட்டீர்களாக்கும் என்றல்லவா பார்த்தேன்? லீவு முடிகிற வரையில் இப்படிச் சுற்றி விட்டு அப்புறம் பார்த்துக் கொள்ளலாம் என்று உத்தேசமா? நீ! நீ! நல்ல சுதந்திரம் ஐயா, இது! பேஷ், பேஷ்! உடனே வரைப்பார்க்கப் போய்ச் சேருங்கள்!"

நடேசன் இப்படிக் கேலியும் பரிகாசமும் கலந்த குரலில் கூறியதுதான் தாமதம்— அங்கே வாசற்புறத்திலிருந்து 'பளிச்' என்று 'டார்ச்' லைட்டின் வெளிச்சம் அவர்கள் மேல் விழுந்தது.

அத்துடன் கணீர் என்ற குரலில் யாரோ பேசுவதும் அவர்கள் காதில் தெளிவாக விழுந்தது.

"அத்திம்பேரே, நீங்கள் இங்கேயா இருக்கிறீர்கள்? சத்து பொர்தெல்லாம் தேடி, மூலை முடுக்குகளில் எல்லாம் தேடி எவ்வளவு அலுத்துப் போனேன் தெரியுமா? அக்கா ஏதோ தெரியாத்தனமாகச் சொன்னதைப் பெரிதாக நினைத்துக் கொண்டு சாப்பிடாமல் வந்து விட்டீர்களே! இதோ அப்பாவும் வந்திருக்கிறார்!" என்றான் நடேசனின் மைத்துனன்.

"மாப்பிள்ளை, இப்படி ஓரேயடியாய்க் கோபித்துக் கொண்டு வந்து விட்டீர்களே! இதெல்லாம் கிரகஸ்தாசிரமத்தை நடத்துகிறவர்கள் செய்யக்கூடிய காரியமா? மனைவி புருஷன் என்றால் ஏதோ மனஸ்தாபம் ஏற்படுவது சகஜந்தான். அதையெல்லாம் பெரிதாகக் கொண்டு போகலாமோ? குழந்தை தெரியாத்தனமாக உங்களிடம் நடந்து கொண்டதற்கு வருத்தப்படுகிறாள். எழுந்திருங்கள், போகலாம்."

மைத்துனன் சொன்னது போதாதென்று மாமனாரும் அங்கே தோன்றி இப்படிச் சொல்லவே நடேசனால் ஒன்றும் பேச முடியவில்லை. வாய் திறவாமல் திண்ணையிலிருந்து எழுந்து மாமனாரையும் மைத்துனனையும் தொடர்ந்தான்.

அந்த இருளில் திருவாரூர்க்காரரின் முகம், தன்னைப் பரிகசிப்பதுபோல் அவனுக்குத் தெரிந்தது.

# சுதந்திர தீபாவளி

## மலிந்த விலையில்

### 2000 டிசைன்களில் பட்டாடைகள்

### 4000 டிசைன்களில் நூல் ஆடைகள்

தீபாவளிக்காக புதிய டிசைன்களில் உயர்தர கொள்ளேகாலம் பட்டினுலும், 100, 80, 60, நெ. நூல்களிலும் உத்திரவாதமான கெட்டிச் சாயம் போட்டு ஸ்பெஷலாக தயாராகி வந்து கொண்டிருக்கின்றன.

பெங்களூர், பெனூரஸ், பெங்கால், கொள்ளேகாலம், ஆரணி, காஞ்சீபுரம், பட்டு சேலைகள் அற்புதமான பார்டர்கள், வசீகரமான முந்திகளுடன் 5, 6, 7, 8, 9, 10 கெஜங்களில் திறமையான நெசவாளர்களால் நிபுணர்களின் மேற்பார்வையில், உயர்தரமாக நெய்யப்பட்டு வந்து குவிந்துள்ளன.

நூல் சேலைகள் உறையூர், கோயம்புத்தூர், மதுரை, சேலம், அம்மாசத்திரம், லக்காரம் பேட்டை ஜம்மலமடுகு முதலிய ஊர்களிலிருந்து புதுப்புது டிசைன்களில் அழகான பார்டர்கள், நேர்த்தியான முந்திகளுடன் கண்கவர் கலர்களில் 5, 6, 7, 8, 9 கெஜங்களில் வந்து குவிந்து கொண்டிருக்கின்றன.

சேலம், அயிலி, மதுரை, மெல்லிய நூல் வேஷ்டிகள், ஜரிகை துப்பட்டாக்கள், அங்கவஸ்திரங்கள், வெண்பட்டு வேஷ்டிகள், அங்கவஸ்திரங்கள் ஆயிரக்கணக்கான டிசைன்களில் வந்து குவிந்துள்ளன.

பட்டுச் சேலைகள் ரூ. 17-0-0 முதல் 700 வரை

நூல் சேலைகள் ரூ. 7-12-0 முதல் 70 வரை

ஏழைகள் பணக்காரர்கள் எல்லோருக்கும் பொருத்தமான விலைகள்.

சகாயமான விலைகள் நேர்த்தியான ரகங்கள்

இன்றே வந்து பார்வையிடுங்கள்

## கஸ்தூரிபாய் கம்பெனி

உயர்தர பட்டு நூல் ஜவுளி வியாபாரிகள்

மேல வீதி :: சிதம்பரம்

## நீங்கள் கவனிக்க வேண்டியது!



குணம் நிறைந்த
கோகுல் கூந்தல்
தைலம்

கூந்தலுக்கு சிறந்த மணமும் மிகுந்த வனப்பும் நிறைந்த வளர்ச்சியும் தருகிறது. ஆயிரக்கணக்கான மக்கள் அதையே உபயோகிப்பதன் உண்மையும் அதுவே






கோகுல் டிரேட் மார்க் கவனித்து வாங்குங்கள்

## டி. எஸ். ஆர். & கோ
கும்பகோணம்

மதராஸ் ஏஜண்டு :

புஷ்பவனம் ஸ்டோர்ஸ்

பைகிராப்ட்ஸ் ரோடு,

திருவல்லிக்கேணி :: மதராஸ்

கோவை, நீலகிரி ஜில்லாக்கள் & பாலக்காடுக்கு ஏஜண்டு :

B. பாலபட்டாபி,

வைசியாள் தெரு, கோயமுத்தூர்

**Be Smart - use Gevaert**

# குறிப்பாகப் படமெடுக்க

போட்டோவைத் தொழிலாகக் கொண்டவர்களுக்கும் சரி, பொழுது போக்காகக் கொண்டவர்களுக்கும் சரி, உங்கள் காமிராவிற்கு மிகப் பொருத்தமான அதிவேகம் பொருந்திய பிலிம் இதோ இருக்கிறது—வீட்டினுள் எடுப்பதற்கும் வெளிப்புறக் காட்சிகளுக்கும் உகந்தது. கேவார்ட்டின் பான்க்ரோமோஸாவின் வர்ண பேத சக்தி ஓர் பிரத்யேக அம்சம்.

உள்ளூர் போட்டோ சாமான் விற்பனையாளரிடம் பாருங்கள்







இந்தியாவில் மொத்த விற்பனையாளர்கள்

அல்லெய்ட் போட்டோகிராபிக்ஸ் லிமிடெட்

பம்பாய் - கல்கத்தா - மதராஸ்

# விலையில்லா மாணிக்கம்


இச்சு

ஒரு காட்டில் ஒரு சிங்க ராஜா இருந்தது. அதற்கு ராஜு, தாஜு என்று இரண்டு குட்டிகள் இருந்தன. ராஜூவும் தாஜூவும் எப்பொழுதும் சண்டை போட்டுக் கொண்டே இருக்கும். இதனால் தனக்குப் பிறகு வேறு ஏதாவது ஒரு காட்டுச் சிங்கம், ஆங்கிலேயர்கள் இந்தியாவைப் பிடித்ததுபோல் இவர்களுக்குள் சண்டை மூட்டி விட்டுத் தன்னுடைய காட்டைப் பிடித்துக் கொண்டு விடுமோ என்ற பயம் சிங்கராஜாவுக்கு!

இந்தப் பயத்தினால் தானோ என்னவோ, ஒரு சமயம் சிங்கராஜாவுக்குக் கடும் ஜூரம் கண்டது. அந்த ஜூரத்தில் தான் பிழைப்பது ரொம்ப அரிது என்று அது கண்டுகொண்டது. ஆகவே, அது தன் குட்டிகளைக் கூப்பிட்டு, "என்னிடம் ஒரு விலையில்லா மாணிக்கம் இருக்கிறது......" என்று ஏதோ சொலல ஆரம்பித்தது.

உடனே "எங்கே இருக்கிறது? எங்கே இருக்கிறது?" என்று ராஜூவும் தாஜூவும் ரொம்ப ரொம்ப ஆவலுடன் கேட்டன.

"அது எங்கே இருக்கிறது என்று இப்பொழுது நான் சொல்லமாட்டேன். அது இன்ன இடத்தில் இருக்கிறது என்று ஒரு சீல் வைத்த கவரில் எழுதி வைத்திருக்கிறேன். அந்தக் கவரை அடுத்த காட்டில் இருக்கிறாரே உங்கள் மாமன், அவரிடம் கொடுத்திருக்கிறேன். பத்து வருஷ காலம் நீங்கள் சண்டை போடாமலிருந்தீர்களானால் அந்தக் கவரை உங்கள் மாமா உங்களிடம் கொடுப்பார். இல்லையென்றால் அந்த விலையில்லா மாணிக்கத்தை உங்கள் மாமாவே எடுத்துக்கொண்டுவிடுவார்!" என்றது சிங்கராஜா.

பாவம், அதற்குப் பிறகு அது பத்து நிமிஷம் கூட உயிர் வாழ்ந்திருக்கவில்லை.

சிங்கராஜா சொல்லி விட்டுச் சென்றபடி ராஜூவும் தாஜூவும் பல்லைக் கடித்துக்கொண்டு சண்டை போடாமல் இருந்தன. அப்படி ஏதாவது கோபம் வந்தால் ராஜூ பதில் பேசாமல் ஒரு தடியை எடுத்துக் கொண்டு கடற்கரைக்குப் போய்விடும். அங்கே தனக்கிருக்கும் கோபத்தையெல்லாம் சமுத்திரத்திலிருந்து கரைப் பக்கமே ஓடி வரும் பூச்சிகள் மீது காட்டும். இப்படி நாளடைவில் இரண்டும் ரொம்ப சௌஜன்யமாக இருக்க ஆரம்பித்தன. இல்லையென்றால் அந்த விலையில்லா மாணிக்கம் அவற்றின் கையை விட்டுப் போய் விடுமல்லவா?

எப்படியோ பத்து வருஷ காலம் சென்றது. சிங்க மாமா தன்னிடம் சிங்கராஜா கொடுத்துவிட்டுப் போன கவரை அந்தக் குட்டிகளிடம் கொடுத்தது. அதை ஆவலுடன் இரண்டும் பிரித்துப் பார்த்தன. அதில் பின் வருமாறு எழுதியிருந்தது:

"என் அருமைக் குழந்தைகளே!

என்னிடம் விலையில்லா மாணிக்கம் ஒன்றும் இல்லை. நீங்கள் இருவரும் இரவும் பகலும் சண்டை போட்டுக் கொண்டிருந்தீர்கள். உங்களுக்குள் எப்படி ஒற்றுமை ஏற்படுத்துவது என்று எனக்குப் புரியவில்லை. கடைசியில் எனக்கு ஒரு யோசனை தோன்றியது. யாருக்கும் பொருள் மேல் ஆசை ஏற்படுவது சகஜம். வெகுமதிக்காகவாவது நீங்கள்



ஒருவருக்கொருவர் சண்டை போடாமல் இருப்பீர்கள் என்று எனக்குத் தோன்றியது. ஆகையினால்தான் பத்து வருஷ காலம் சண்டை போடாமலிருந்தால் உங்களுக்குக் கடைசியில் மாணிக்கம் கிடைக்கும் என்று சொன்னேன். இக் கடிதத்தைப் படிக்கும்பொழுது நீங்கள் இருவரும் ஒற்றுமையாக வாழக் கற்றுக் கொண்டிருப்பீர்கள் என்று நினைக்கிறேன். அப்படியிருந்தால் உங்களுக்குள் ஏற்பட்டிருக்கும் ஒற்றுமை ஆயிரம் மாணிக்கங்களுக்குச் சமானம்! ஆகையினால் நான் சொன்னபடி மாணிக்கம் ஒன்றும் கிடைக்கவில்லை எனறு நீங்கள் வருத்தப்பட மாட்டீர்கள் என்று நம்புகிறேன்.

உங்கள் பிரியமுள்ள,

சிங்கம்."

இந்தக் கடிதத்தைப் படித்து முடிக்கும் வரை அவற்றின் அருகிலேயே நின்று விஷமத்துடன் கவனித்துக் கொண்டிருந்த சிங்க மாமா, "பயல்களா! நீங்கள் சண்டை போட்டுக் கொள்ளாமலிருப்பதற்கு உங்களுக்கு மாணிக்கமா வேண்டும், மாணிக்கம்!" என்று கூறி விழுந்து விழுந்து சிரித்தார்.

ராஜுவுக்கும் தாஜுக்கும் தகப்பனார் தங்களை இப்படி ஏமாற்றி விட்டாரே என்று முதலில் கொஞ்சம் வருத்தமாய்த்தான் இருந்தது. ஆனால் ஐந்து நிமிஷம் கழித்து, தங்கள் தகப்பனார் செய்ததுதான் ரொம்ப சரி என்று அந்தக் குட்டிகளுக்குத் தோன்றியது. ஏனெனில், தங்கள் தகப்பனார் சொல்லி விட்டுச் சென்றபடி உண்மையிலேயே விலையில்லா மாணிக்கம் என்று ஒன்று அந்தக் கவரில் இருந்தால் அதைப் பிரித்து எடுத்துக் கொள்வதைப் பற்றி வீண் சண்டைகள் கிளம்பும். அதனால் அவற்றின் ஒற்றுமைக்குப் பங்கம் ஏற்பட்டாலும் ஏற்படுமல்லவா?

## பிள்ளையார் பிடிக்க.........



என்னே
*அவளது எழில்!

*ஸுரேகா:
அடக்கமும் இனி
மையும் வாய்ந்த
கோமள வதனி...

அவள் பாண்ட்ஸ்
உபயோகிக்கிறாள்!

உலகின்கண் எழில்மிக்க நங்கையர்கள் சிலர் பாண்ட்ஸையே உபயோகிக்கின்றனர்....... உங்கள் வதனம் அதிக மழமழப்புடன், அன்றலர்ந்த மலரென விளங்க வேண்டுமாயின், இன்றையிலிருந்தே இம்மெல்லிய, நறுமணங்கமழும் க்ரீம்கள் உபயோகித்து வாருங்கள்.

# பாண்ட்ஸ் க்ரீம்ஸ்

பாண்ட்ஸ் தினசரிமுறை




பாண்ட்ஸ் கோல்ட் க்ரீம்: தினம் இரண்டுவேளை விரல் நுனிகளால் கோல்ட் க்ரீம் மெதுவாகத் தடவி, முகத்தை செம்மையாகச் சுத்தம் செய்யுங்கள். பாண்ட்ஸ் டிஷ்யூ வால் துடைத்துக் கொள்ளவும்.




பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம்: பின்பு வானிஷிங் க்ரீம் தடவுங்கள். அது சருமத்தினுள் மறைந்தேது—சருமத்திற்கு பாதுகாப்பு அளிக்கிறது.




பாண்ட்ஸ் பௌடர்: பின்னர் வேண்டுமானால் கொஞ்சம் பௌடரும் தடவிக் கொள்ளுங்கள். முகம் பூத்தமலர்போன்று மோகன காந்தியுடன் விளங்கும்.

வியாபார விவரங்களுக்கு: எல்: டி. ஸெய்மூர் & கோ. (இந்தியா) லிட்.
பம்பாய் - கல்கத்தா - கராச்சி - சென்னை.




எம். என். சுப்பிரமணியம்

(சென்ற வாரத் தொடர்ச்சி)

ஒரு நாள் எங்களவர் சுமார் காலை பத்து மணிக்குக் குளித்துவிட்டு ஸ்நான அறையிலிருந்து வந்து கொண்டிருந்தார். அப்போது அவரைத் தேடிக் கொண்டு பங்களாவின் சொந்தக்காரன் வந்தான். வந்தவன் ஏதோ ஒரு 'கேஸ்' விஷயமாக 'லா பாய்ண்ட்'களைப் பார்க்க வேண்டுமென்றும், கூடவே வரவேண்டுமென்றும் அவரை வேண்டினான். உடனே இவர் எல்லாவற்றையும் போட்டுவிட்டு, 'ட்ரஸ்' பண்ணிக் கொண்டு கிளம்பி விட்டார்.

"சாப்பாடு?" என்றேன் நான்.

உடனே பங்களாக்காரன், "வேண்டாம் அம்மா! அவர் எங்களோடு அங்கே சாப்பிடுவார். முக்கியமான வேலை இருக்கிறது; மன்னிக்க வேண்டும். தவிர, அவர் சாயங்காலம்தான் திரும்ப முடியும்" என்று பதிலளித்தான்.

"சரி, ஜாக்கிரதையாயிரு. எவ்வளவு சீக்கிரம் வந்துவிட முடியுமோ, அவ்வளவு சீக்கிரத்தில் வந்து விடுகிறேன்" என்று சொல்லி விட்டு அவர் போய் விட்டார்.

அன்று மத்தியானம் முதல் மாலதி தன் தலைத் திருகுப் பூவைக் காணோம் என்று தேடிக் கொண்டிருந்தாள். அவளுக்குக் கோபம் கோபமாய் வந்தது. கபடமில்லாத குணமானபடியால், அவள் சுபாவம் அடிக்கடி மாறும்.

"எண்டி, எங்கு வைத்தாய் என்று நன்றாய் ஞாபகப்படுத்திக் கொள்ளேன்" என்றேன் நான்.

"அது தெரிந்தால் இத்தனை வம்பு எதற்கு? அம்பு விட்டாற்போல 'விர்' சென்று அங்கே போய் எடுத்துக்கொண்டு வந்துவிட மாட்டேனா? எனக்கென்னவோ, என்னுடைய அசிரத்தையைப் பயன்படுத்திக்கொண்டு யாரோ திருடி விட்டார்களென்று தான் தோன்றுகிறது" என்றாள்.

"இருக்காது, எங்கேயாவது போட்டிருப்பாய். தேடிப் பார்!" என்றேன் நான்.

பாவம், மத்தியான முதல் தேடித் தேடி உடலும் மனமும் அசந்து போன அவளுக்கு மேலும் மேலும் கோபந்தான் வந்தது.

"போங்கோ, அம்மாமி!" என்று கோபமும் அழுகையும் கலந்த குரலில் சொல்லி விட்டுப் போய்விட்டாள்.

மணி ஆறு இருக்கும். வாசலில் கார் வந்து நின்றது. கதவைத் திறந்து கொண்டு எங்களவர் இறங்கினார். முகம் சிறிது வீங்கிப் பெருமூச்சு விடுவதாகத் தோன்றியது. 'கமலம்!' என்று கூப்பிட்டுக்

கொண்டே வருபவர், அன்று பேசாமல் சிரமத்துடன் படிக்கட்டு ஏறுவதைப் பார்த்துத் துணுக்குற்றேன். டிரைவர் ஒரு கையைப் பிடித்துக்கொண்டு மெதுவாக படியேறிக் கொண்டிருந்தான். நான் ஓடிப் போய் மறு கையைப் பிடித்துக் கொண்டேன். கை அனலாய்க் கொதித்தது. பரபரவென்று படுக்கையை விரித்தேன். அவர் பேசாமல் படுத்துக் கொண்டார்.

சாயங்கால முதல் அவருக்குச் சிறிது குளிரா யிருந்ததாயும், நேரம் ஆக ஆகக் கொஞ்சம் ஜுரமும் வந்துவிட்டதென்றும் அவரை டாக்டரிடம் காட்டி மருந்தும் வாங்கி யிருப்பதாகச் சொல்லி, மருந்து சீசாவையும் டிரைவர் என்னிடம் கொடுத்தான். மருந்து கொடுக்க வேண்டிய நேரத்தையும் முறையையும் சொல்லி விட்டு, ஜுரம் சாதாரணமானதுதா னென்று டாக்டர் சொன்னதாயும் சொல்லி விட்டு, அவன் போய் விட்டான்.

கதவு, ஜன்னல் யாவற்றையும் சாத்தி விட்டு அவரருகில் போய் உட்கார்ந்தேன். உடம்பு நெருப்புப்போல் கொதித்தது. எனக்குப் பதைபதைத்தது. 'தனியாக ஆணும் பெண்ணும் வந்திருக்கிறோம். உதவிக்கோ, ஆறுதலுக்கோகூட மனுஷ்யாள் இல்லை. என்ன சோதனை!' என்று மனம் தெய்வத்திடம் தஞ்சம் புக ஆரம்பித்தது.

"என்ன, காப்பி வேணுமா?" என்றேன் மெதுவாக.

வாயைத் திறந்து மெள்ள "வேண்டாம்" என்றார்.

உடம்பு என்ன செய்கிறதென்று கேட்டதற்கு "ஒன்றுமில்லை, சிறிது குளிர் ஜுரமா யிருக்கிறது. காலையில் சரியாய்விடும்" என்று மெதுவாகச் சொல்லி விட்டு, அப்படியே கண் அயர ஆரம்பித்தார்.

இரவு மணி ஒன்பது ஒன்பதரை இருக்கும். இவர் மூடிய கண் திறக்கவில்லை. கூப்பிட்ட குரலுக்கும் பதிலில்லை. நெற்றிக் கட்டில் கை வைக்க முடியாமல் கொதித்தது. எனக்கு என்ன செய்வதென்று புரியவில்லை. அழுகையாய் வந்ததே தவிர மேலே ஒன்றும் ஓடவில்லை. மருந்துப் புட்டியை எடுக்கும்போது சட்டென்று நினைவு வந்தது, 'மாலதியின் கணவர் டாக்டரல்லவா?' என்று.

உடனே மாலதியின் அறைக்கு ஓடினேன். கதவு சிறிதே திறந்திருந்தது. மாலதி கட்டிலின்மேல் திண்டின்மீது சாய்ந்து படுத்திருந்தாள். பாஸ்கரன் எதிரே நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு, கட்டிலில் காலை உதைத்துக் கொண்டு சிரித்துச் சிரித்து ஏதோ வார்த்தையாடிக் கொண்டிருந்தார். கொஞ்சமாகத் திறந்திருந்த கதவிடுக்கின் வழியாக ஊதுவர்த்திப் புகை வந்துகொண்டிருந்தது.

அந்தச் சந்தர்ப்பத்தில் மாலதியைக் கூப்பிட நான் சிறிது தயங்கினேனென்றாலும் என்னுடைய உதவியற்ற நிலைமையின் வேகத்தால் தூண்டப்பட்டு, "மாலதி!" என்று அவளைக் கூப்பிட்டே விட்டேன். உடனே எழுந்து வந்த அவளிடம் விஷயத்தைக் கூறினேன். உள்ளே சென்ற அவள் சிறிது நேரத்தில் பாஸ்கரனுடன் திரும்பினாள்.

பாஸ்கரன் வந்து அவரைப் பரிசோதித்து விட்டு, பழைய மருந்தைக் கீழே கொட்டி விடச் சொன்னார். பக்கத்து மருந்துக்



கடைக்குப் போய் வருவதாகச் சொல்லி அவர் வெளியே போனார். போகும்போது கவலைக்கு ஒன்றும் இடமில்லை யென்றும், இரண்டு மூன்று நாட்களில் குணமாகி விடு மென்றும் சொன்னவர், மாலதியைப் பார்த்து 'ஸ்டௌ'வை மூட்டச் சொல்லி விட்டுப் போனார். மாலதி 'ஸ்டௌ'வை மூட்டிச் சிறிது வெந்நீர் கொதிக்க வைப்பதற்குள், பாஸ்கரன் ஒரு 'இஞ்செக்ஷன்' மருந்துக் குழாய் வாங்கிக் கொண்டு இஞ்செக்ஷன் உபகரணங்களுடன் வந்து சேர்ந்தார். ஒரு இஞ்செக்ஷன் கொடுத்துவிட்டு இரவு இரண்டு மணிக்கு மற்றொரு இஞ்செக்ஷன் கொடுக்க வேண்டுமென்று சொல்லிவிட்டு மாலதியை அங்கேயே விட்டுவிட்டுப் போய்விட்டார். இவர் இந்த வேகத்து ஸ்மரணையே இல்லாமல் பிரக்ஞையற்றுக் கிடந்தார். ஒரு தரம் வியர்த்து விட்டது. கொஞ்சம் கண்ணைத் திறந்து பார்த்து விட்டு மறுபடி தூங்க ஆரம்பித்தார். மறுபடி பாஸ்கரன் வந்து எட்டிப் பார்த்து நோயாளியை ஒன்றும் கேட்க வேண்டா மென்றும், அயர்ந்து தூங்குவது நல்ல தென்றும் சொல்லி, என்னையும் கவலைப் படாமல் படுத்துக் கொள்ளச் சொல்லிப் போய் விட்டார். நான் ஆனமட்டும் மாலதியைப் போய்ப் படுத்துக் கொள்ளச் சொல்லியும் அவள் என்னுடனேயே படுத்துக் கொண்டாள்.

காலையில் அவர் சிறிது கண் திறந்தார். என்றாலும், அசக்தியினாலும் காயலாட்டியினாலும் அதிகமாகப் பேச முடியவில்லை. உடம்பு சாதாரண நிலைமைக்கு வர ஐந்தாறு நாட்கள் ஆயின.

அன்று அவர் படுத்திருந்த அறைக்குப் பக்கத்து அறையில் நானும் மாலதியும் பேசிக் கொண்டிருந்தோம். ஏதோ சாமான் எடுப்பதற்காக நான் அலமாரியைத் திறந்தேன். ஜன்னலில் சாய்ந்து உட்கார்ந்து கொண்டிருந்த மாலதி, நான் அலமாரியைத் திறந்ததும் பாய்ந்து ஓடிவந்து மேல் தட்டிலிருந்த எதையோ கையிலெடுத்துக் கொண்டு வாயிற்படி அருகில் போய் நின்று கொண்டு, "இது இங்கே எப்படி வந்தது?" என்று அதட்டும் தோரணையோடு என்னை விறைத்துப் பார்த்துக் கேட்டாள்.

அவள் கையில் ஒரு திருப்பூ இருந்தது.

நான் அதைக் கூர்ந்து பார்த்தேன். அவள் தூர நின்றபடியே அந்தத் திருப்பூவை உள்ளங் கையில் வைத்துக் கொண்ட படி காட்டினாள். அவள் இடுப்பில் கையை வைத்துக் கொண்டு நின்ற தோரணையும், அவளது கடுகடுத்த முகபாவமும் எனக்கு என்றுமில்லா வியப்பை அளித்தது. எனக்கு யாதொரு சந்தேகமும் தோன்றவில்லை.

"எப்படி வந்தது என்றால்? என் சாமான் என்னிடம் இல்லாமல் பின் எங்கு போகும்?" என்றேன்.

"உங்களுடையதா? இருக்கும்!" என்று என்னை மிருந்த உதாசீனத்தோடு ஒரு பார்வை பார்த்துவிட்டு, அவள் விருவிரு வென்று போய் விட்டாள். திருப்பூவும் அவளுடனேயே போய்விட்டது!

எனக்கு ஒன்றும் புரியவில்லை. திருப்பூ என்னுடையதுதானென்பதில் எனக்கு எப்படிச் சந்தேகம் ஏற்படும்? நீலக் கற்கள் வைத்திழைத்த எனது திருப்பூ கல்யாணத்தின்போது என் மாமா வாங்கிக் கொடுத்தது. இது என்ன விளையாட்டு! இப்படியும் பிறர் மனம் நோகச் செய்து விளையாடும் ஒரு பெண் உண்டா?

இதையெல்லாம் ஒன்றுமறியாமல் அவர் நன்றாகத் தூங்கிக் கொண்டிருந்தார். தூங்கி எழுந்தவுடன் மணியைப் பார்த்துவிட்டு, "கமலம், கிளம்பு! வெளியில் போய் உலாவிவிட்டு, அப்படியே மருந்தும் வாங்கிக் கொண்டு வந்து விடலாம்" என்றார்.

வாஸ்தவந்தான். அவரும் வெளிக் கிளம்பி ஐந்தாறு நாட்களாகின்றன. முதல் நாளிலிருந்து உடம்பு நன்றாய்த் தேவலை. கொஞ்சம் வெளியே போய்வருவது நல்லது தானென்று எண்ணி நானும் கிளம்பினேன்.

வெளியே போகும்போது மாலதியிடம் சொல்லிக் கொள்ள அவள் அறைக்குப் போனேன். கதவு உள்ளே தாளிடப்பட்டிருந்தது. மெள்ள ஒருமுறை கூப்பிட்டுப் பார்த்தேன்; பதிலில்லை. "காலை நான் மூக்கித்தான் சந்தர்ப்பக் கோளாறினால் அவர்கள் உள்ளே இருக்கும்போது குறுக்கிட நேர்ந்தது. இப்பொழுது என்ன, வந்து பார்த்துக் கொள்ளலாம்" என்று எண்ணித் திரும்பிவிட்டேன்.

வெளியே போனவிடத்தில் அவருடைய பழைய சிநேகிதர் ஒருவர் பிடித்துக் கொண்டார். அவர் வீட்டுக்குப் போய் ரொம்ப நேரம் இருந்துவிட்டு, இரவு ஒன்பது மணிக்குத் திரும்பினோம்.

வந்தவுடன் கவனித்தேன். மாலதியின் அறை பூட்டப்பட்டுக் கிடந்தது. எங்காவது வெளியே போயிருக்கக் கூடும் என்று எண்ணினேன். மணி பத்தாயிற்று, பதி

ளென்றாயிற்று, பன்னிரண்டும் அடித்தது. ஒருவரும் திரும்பவில்லை. நானும் தூங்கி விட்டேன். காலையில் எழுந்ததும் போய்ப் பார்த்தேன். கதவு பூட்டியபடியே கிடந்தது!

பக்கத்திலிருந்தவர்களை விசாரித்தேன். விஷயம் தெரிந்தது. முதல் நாள் சாயங் காலம், மாலதியின் தகப்பனாருக்கு உடம்பு ரொம்ப அசௌக்கியம் என்று தந்தி வந்த தாயும் அவர்கள் உடனே புறப்பட்டு இரவு 7½ மணி வண்டிக்கே போய் விட்டதாயும் அறிந்தேன்.

எனக்கு ஒன்றுமே ஓடவில்லை. முந்திய நாள் சம்பவங்களெல்லாம் ஞாபகத்திற்கு வந்தன. உயிராய்ப் பழகின மாலதி, சொல் லிக் கொள்ளாமல்கூடப் போய்விட்டாளே! எனக்கு ஒன்றும் பிடிபடவில்லை. அவரிடம் ஓடி சமாசாரத்தைச் சொன்னேன். பேச்சு வாக்கில் முந்தைய நாள் சாயந்திர நிகழ்ச்சி களையும் கூறினேன்.

“திருகுப் பூவா? எங்கே போட்டுவிட்டு வந்தாய்?” என்றார் அவர் சிரித்துக் கொண்டே.

“போடவாவது, எடுக்கவாவது! என்ன சொல்கிறீர்கள்?”

“ஸ்நான அறையில் திருகுப் பூவை யும் மோதிரத்தையும் போட்டுவிட்டு நீ வர வில்லையா? பின் எனக்கு எப்படி அகப் பட்டதாம்! அலமாரி மேல் தட்டிலேயே அவற்றை வைத்திருக்கிறேன். போய்ப் பார்! அன்றைக்குப் பங்க ளாக்காரன் வந்து கூப்பிட்டபோது, அவசரத்தில் உன்னிடம் சொல்ல மறந்து போனேன். நீ பாட்டுக்கு கண்ட இடத்தில் கழற்றி வைத்து விட்டு வந்து விடுகிறது, நான் தேடி எடுத்து வருவது!” என்றார் அவர் சிரித்துக் கொண்டே.

“மோதிரமாவது, மொச்சைக் கொட்டையாவது! நான் மோதி ரமே போட்டுக் கொண்டு வர வில்லையே!” என்று திகைத்தேன் நான்.

“போய்ப் பார்!” என்று அவர் சாவதானமாகக் கையைக் காட்டினார்.

அலமாரியின் முதல் தட்டில் ஏறிக் கொண்டு, மேல் தட்டில் எட்டிப் பார்த்தேன். பளபள வென்று ஒரு வைர மோதிரம் மின்னியது மாலதி யுடைய தல்லவா இது!

என் தலை சுழன்றது. பெட்டியைத் திறந்து எல்லாவற்றையும் வாரி இறைத் துத் தேடினேன். அடியில் என் திருகுப் பூ —என் மாமா வாங்கிக் கொடுத்த திருகுப் பூ — கிடந்தது! இரண்டுக்கும் என்ன ஒற்றுமை! கல்லாய்ச் சமைந்தேன். என்ன அவமானம்! மாலதி என்ன நினைத்திருப் பாள்? என்ன நினைத்திருக்க மாட்டாள்? இவருக்கு என் மோதிரம் கூடவா அடை யாளம் தெரியாமல் போயிற்று?

“கிளம்புங்கள், இப்பொழுதே பங்க ளூருக்கு!” என்றேன்.

“பங்களூருக்கா! அங்கே எதற்கு? அங்கே யார் இருக்கிறார்கள்?” என்றார் அவர் வியப்புடன்.

“ஐயோ, இது மாலதியின் மோதிர மல்லவா! என்னுடையதென்று எப்படி எண்ணிக் கொண்டீர்கள்? நமக்குக் கல் யாணமாகி மூன்று வருஷங்களாகின் றனவே, என்னுடைய சாமான்கள் உங்க ளுக்குத் தெரியாதா?” என்று சொல்லி அவரிடம் எல்லாவற்றையும் சாங்கோபாங்க மாகக் கூறினேன். அவரும் பதைபதைத் தார். எல்லாவற்றையும் கட்டி எடுத்துக் கொண்டு அன்றிரவே பங்களூருக்கு ரயில் ஏறினோம். நல்ல வேளையாக, கடிதப் போக்குவரத்துக்காக மாலதியின் விலாசத்தை முன்னமேயே தெரிந்து வைத்துக் கொண்டிருந்தேன். மாலதியின்



வாங்க வந்தவர்:—இதென்ன, இந்தத் துணி யைத் தண்ணீரில் நனைத்தால் சுருங்கிவிடுமோ?

கடைக்காரர்:—ஒரு நாளும் சுருங்காது!......

வாங்க வந்தவர்:—அப்படி யென்றால் வேண் டாம்! ரேஷன் குறையக் குறைய உடம்பு இளைப்பது போல் துணியும் சுருங்கிக் கொண்டு வந்தால்தானே சௌகரியமாயிருக்கும்!

கணவன் தன் மாமனாருடைய வீட்டில்தான் வைத்தியசாலை வைத்து நடத்திக் கொண்டிருப்பதாக அவள் சொல்லி எனக்குத் தெரியும்.

பங்களூர் போய்ச் சேர்ந்தோம். மாலதியின் வீட்டை அடைந்து அவளைப் பார்த்ததுடன், அவள் சிறிது வியப்புற்றதாகத் தோன்றியதென்றாலும், என்னிடம் அவள் முன்போல் பரிவு காட்டவில்லை. என்னை வெறுப்பாகவே பார்த்தாள்.

“மாலதி!” என்று சொல்லி, மோதிரத்தை நீட்டினேன்.

அவளுக்குத் தூக்கிவாரிப் போட்டது!

“இதை அவரிடமல்லவா கொடுத்திருந்ததாக நினைத்தேன்!” என்றாள்.

“எப்போது கொடுத்தாய்?” என்றார் அப்பொழுது அங்கே வந்த பாஸ்கரன். மாலதி விழித்தாள்!

எல்லா விஷயமும் சாங்கோபாங்கமாய் என் கணவரால் விரித்துரைக்கப் பட்டது. வக்கீலல்லவா!

புருஷர்கள் போனபின் மாலதி என்னைக் கட்டிக்கொண்டு கண்ணீர் உகுத்தாள். “என்னை மன்னிப்பீர்களா?” என்று கெஞ்சினாள்.

“பைத்தியமே; யாரை யார் மன்னிப்பது? சந்தர்ப்பங்கள் பிரதிகூலமாய் அமைந்து விட்டால், யார்தான் என்ன செய்ய முடியும்?” என்று நானும் ஏதோ சொல்லி வைத்தேன்.

பிறகு அவள் வீட்டுச் சமாசாரங்களையெல்லாம் அறிந்தோம். அவள் தகப்பனுக்கு உடம்பு தேவலையென்றும், பீதி காரணமாகவும் பெண்ணை விட்டு அதிக நாள் பிரிந்திருந்த ஏக்கத்தாலும் அவ்வாறு தந்தி அடித்தார் என்றும் தெரிந்தது. நான்கு நாட்கள் வரை அங்கிருந்து கிளம்பவே அவர்கள் எங்களை விடவில்லை. மாலதியின் குதூகலத்துக்கோ அளவேயில்லை. குதியாய்க் குதித்தாள்.

கடைசியில் கிளம்பினோம். வண்டி ஏறுவதற்கு முன் ஞாபகார்த்தமாகக் கொடுக்கத் தயாராய் வைத்திருந்த சாமானை மூடியவாறே அவள் கைகளில் மறைத்துக் கொடுத்தேன்! அதே சமயத்தில் அவளும் ஏதோ ஒன்றை என்னிடம் கொடுத்தாள். அதை மெல்லப் பார்த்ததும் எனக்குச் சிரிப்புத் தாங்க முடியவில்லை! அது அவளுடைய திருகுப் பூ! அதேசமயம் அவளும் என் தோளைக் கட்டிக்கொண்டு விழுந்து விழுந்து சிரித்தாள். ஏனென்றால், நான் அவளுக்குக் கொடுத்ததும் என் திருகுப் பூவே!

இரண்டுக்கும் ஒரே வித்தியாசம். அவளுடைய திருகுப் பூவின் நடுவில் பதித்திருந்த சிவப்பு நல்ல பிரகாசமானது. என்னுடையதில் இருந்தது கொஞ்சம் மங்கின சிவப்பு.

கமலம் இவ்வாறு ‘திருகுப் பூ அதிகார’த்தை முடித்தாள்.

சிலப்பதிகாரத்தை விட இது ஒன்றும் தாழ்ந்ததல்லவென்று அபிப்பிராயம் கொடுத்தாள் சாரனா!

* * *

வாசற் கதவை யாரோ தட்டும் சத்தம் கேட்டது.

குரலை அடையாளம் தெரிந்துகொண்டு சாரனா, “அவர் வந்து விட்டார்!” என்று எழுந்தாள். மணி பன்னிரண்டரை இருக்கும். சாரனா கதவைத் திறந்தாள். கல்யாண விருந்து சாப்பிட்டுவிட்டு, வெற்றிலை மென்ற வாயும், சந்தனம் அப்பிய கைகளுமாய் ஐயாசாமன் நின்றுகொண்டிருந்தான்.

சாரனா வாசற்படி தாண்டும்போது கமலம், “சாரனா, அதோ பார்! உன் திருகுப் பூ கழன்று தொங்கிக் கொண்டிருக்கிறது, சரிப்படுத்திக் கொள்!” என்றாள் சிரித்துக் கொண்டே.

சாரனா தொட்டுப் பார்த்தாள். உண்மையில் அது கழன்று தொங்கிக் கொண்டிருந்தது! சிரித்துக் கொண்டே சரிப்படுத்திக் கொண்டு நடந்தாள்.

சிறிது நின்று விட்டு கமலம் கதவைச் சாத்திக் கொண்டு உள்ளே போய்விட்டாள்.

வெளியே வானம் நன்றாய் வெளிவாங்கித் தாரகைகள் மின்னிக் கொண்டிருந்தன. பால் போன்ற நிலவொளியுடன் வெள்ளைக் கட்டிடங்கள் உறவு கொண்டாடின.

“இந்த இருட்டில் எதற்கு வந்தீர்கள்? காலையில் எழுந்து வரக் கூடாதா?” என்று கேட்டுக் கொண்டே சாரனா கதவைத் திறந்து விளக்கைப் போட்ட போது, அது வரையில் கட்டைபோல் கிடந்த வண்டு, சிறகுகளை அடித்துக் கொண்டு சத்தமிட்டவாறு, அவன் தலைக்கு மேலாகப் பறந்து வெளியே போயிற்று!

# மிஸ் மேனகா

எஸ். விஜயராகவன்

டாக்டர் தொழிலுக்கும் வக்கீல் தொழிலுக்கும் போட்டி அதிகம் என்பார்கள். ஆனால் அவனது அதிர்ஷ்ட வசமோ என்னவோ, டாக்டர் சேகரனது விஷயம் இதற்கு முற்றிலும் நேர் மாறான முறையில் இருந்தது.

முன்னொரு காலத்தில் அகில உலகையும் ரோமாபுரி ராஜ்யம் தனக்கு அடிமைப் படுத்திக்கொண்டு தனி அரசு செலுத்தியது என்பார்களே, அதே போல் உசிலம்பட்டி முழுவதிலும் இந்தத் தொழில் விஷயத்தில் டாக்டர் சேகரனுக்கு ஏகபோக உரிமை. அப்பெரிய ஊரில் யாருக்குத் தலை வலித்தாலும், தேள் கொட்டினாலும்—ஏன் 'நிமோனியா', 'நிமோனியா'—என்ன வந்தாலும் சரி, டாக்டர் சேகரனை விட்டால் வேறு ஒருவருமில்லை உதவிக்கு!

இப்படியே இருந்துகொண்டிருக்கும் போதுதான் அந்த எதிர்பாராத விஷயம் நடந்தது. அன்று உசிலம்பட்டி தேரோடும் வீதி வழியாகப் போய்க்கொண்டிருந்தான் டாக்டர் சேகரன். அப்போது அங்கு புதிய வேலைப்பாடுகளுடன் தயாராகும் ஓர் அழகிய கட்டிடம் அவன் கவனத்தைக் கவர்ந்தது.

என்ன அதிசயம்! அங்கே ஒரு புதிய 'டிஸ்பென்ஸரி' வேறு முளைத்துக் கொண்டிருந்தது. அவ்வழகிய கட்டிடத்தின் வாசலில், "மிஸ் மேனகா, எம். பி., பி. எஸ்." என்று ஒரு 'போர்டு'ம் தொங்கிக்கொண்டிருந்தது. மற்றும் அக் கட்டிடத்தைச் செப்பனிடுவதற்கு வேண்டிய வேலைகள் மிகவும் துரிதமாக நடந்துகொண்டிருந்தன.

இதைக் கண்ட டாக்டர் சேகரனின் தலை ஒரு கணம் சுழன்றது. இது என்ன விந்தை! முதன் முதலில் கேவலம் ஒரு பெண்மணியா தன்னுடன் போட்டிக்கு வரவேண்டும்?

அன்றிலிருந்து அவன் மனம் ஒரு நிலையில் இல்லை; மிகவும் குழம்பியிருந்தது. அதற்கேற்றாற்போல், "அப்பாடா! நம்ம ஊருக்கும் ஒரு நல்ல ஆஸ்பத்திரி ஏற்படுகிறது! அதுவும் ஒரு பெண்மணி ஏற்பாடு செய்கிறாள். எவ்வளவு பணிவாக அவள் இருக்கிறாள், தெரியுமா? நம்ம பழைய டாக்டர் சேகரனும்தான் இருக்காரே ...!" என்று ஜனங்கள் சர்வ சாதாரணமாகப் பேசிக்கொள்வதும் அவன் காதில் நாராசம்போல் விழுந்துகொண்டிருந்தது.

மறுபடியும் ஒரு முறை அப் புது ஆஸ்பத்திரியின் வழியாகப் போக நேரிட்டது சேகரனுக்கு. ஆஹா! என்ன தடபுடல்! வாசலில் ஏகப்பட்ட கார்களும் வண்டிகளும் நின்றுகொண்டிருந்தன. 'சூட்'டும் 'பூட்'டும் அணிந்துகொண்டு எண்ணற்ற கனவான்கள் நின்றுகொண்டிருந்தார்கள் வெளி வராந்தாவில். அவர்களின் நடுவே அழகே உருவாய் சினிமாக்காரியைப்போல 'டிரஸ்' செய்து கொண்டு ஒரு நாகரிக நாரீமணி ஒய்யாரமாக நின்று பேசிக்கொண்டிருந்தாள்.

"அவள்தான் அந்த லேடி டாக்டர் போலும்! அடேயப்பா! ஆஸ்பத்திரியைத் திறப்பதற்குள்ளேயே என்ன அமர்க்களம்! என் தொழிலில் மண்ணைப் போட எங்கிருந்து வந்தாளோ, இந்தப் பாதகி!" என்று நினைத்த வண்ணம் போய்விட்டான் டாக்டர் சேகரன்.

அன்று மாலை நேரம். தனது அறையில் அமைதியாக உட்கார்ந்திருந்தான் டாக்டர் சேகரன். தெரு வாசலில் மோட்டார் 'ஹார்ன்' சத்தம் கேட்கவே, ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தான். என்ன அதிசயம்! மிஸ் மேனகாவும் மற்றும் பல கனவான்களும் காரிலிருந்து இறங்கி உள்ளே வந்து கொண்டிருந்தனர்.

"தாங்கள்தானே டாக்டர் சேகரன்?"—இது மிஸ் மேனகாவின் மெல்லிய இனிய குரல்.

"ஆம்...... உள்ளே வாருங்கள்......!" என்று சேகரன் கூறி முடிப்பதற்குள், அனைவரும் அவனது அறையிலிருந்த நாற்காலிகளில் அமர்ந்து விட்டனர்.



"நாங்கள் இந்தத் தேரடித் தெருவில் புதிய ஆஸ்பத்திரி ஒன்று நிர்மாணம் செய்திருக்கிறோம்........." என்று ஆரம்பித்தாள் மிஸ் மேனகா.

"ஹும்.........!" என்று தலையை ஆட்டினான் சேகரன்.

அதற்குள், "இவர்தான் மிஸ் மேனகா;






லேடி டாக்டராக......" என்று மற்றொருவர் அறிமுகம் செய்து வைத்தார்.

"மருந்து பாட்டில்கள் எல்லாம்கூடத் தயாரித்து விட்டோம்......"

"ஹூம்... ஹூம்......"

"...தங்கள் உதவி கொஞ்சம் வேண்டியிருக்கிறது!" என்றாள் மிஸ் மேனகா.

"என் உதவியா! யானை தன் தலையில் தானே மண்ணை வாரிப் போட்டுக் கொள்வதுபோல், என் தொழிலைக் கெடுக்க வந்திருக்கும் உனக்கு நானே உதவி செய்ய வேண்டுமா?" என்று கேட்க முற்பட்டான் சேகரன்.

ஆனால் அவன் வாயிலிருந்து ஒரு வார்த்தையும் வெளிவரவில்லை; அவன் இதழ்கள் மட்டுமே துடித்து நின்றுவிட்டன.

"நாங்களெல்லாம் 'சஞ்சலா மூவிடோன்'னைச் சேர்ந்தவர்கள். 'லேடி டாக்டர்' என்ற தலைப்புடன் நாங்கள் எடுக்கப் போகும் படத்திற்காகத்தான் இவ்வளவும்! மிஸ் மேனகாதான் லேடி டாக்டராக நடிக்கிறாள். அவளது 'டிஸ்பென்ஸரி'யை இங்கேயே படம் பிடிக்கப் போகிறோம். தாங்கள் அவளுக்கு உதவி டாக்டராக நடித்து ஒத்தாசை செய்தால்......"

அவ்வளவுதான்; டாக்டர் சேகரன் மூர்ச்சையானான். வேஷத்தில் மட்டுமே லேடி டாக்டராக இருந்த மிஸ் மேனகா அவனுக்கு என்ன சிகிச்சை செய்வதென்று தெரியாமல் விழித்தாள்!








# காலக்ஷேபம்

### பலன் இல்லை!

அவன் :— அம்மா! ஐயா வீட்டில் இருக்காங்களா?......அவர் இந்த மாதம் இன்ஷூரன்ஸ் 'ப்ரீமியம்' கட்டணும்; இந்தாங்க நோட்டீஸ்!

அவள் :— ஆமாம், எனக்குத் தெரிஞ்சதிலேருந்து அவரும் கட்டிண்டுதான் வரார்; பலனைத்தான் காணோம்!

—எம். ஆர். கே.



### உண்மைதான்!

கிட்டு :— டேய்! நீ எழுதியிருக்கிற இந்த நாவல் என் வாழ்க்கையில் நடந்தது போலவே இருக்கிறது!

பட்டு :— அப்படி யொன்றுமில்லை; உன் வாழ்க்கையைப் பார்த்துத்தானே நான் அந்த நாவலை எழுதினேன்!

—கிருஷ்ணமூர்த்தி.



### வாங்கவில்லை!

தகப்பனார் :— ஏண்டா ராமு! ஏன் பரீக்ஷையில் இவ்வளவு குறைந்த மார்க்கு வாங்கியிருக்கிறாய்?

ராமு :— நான் வாங்கவில்லை, அப்பா! வாத்தியார்தான் கொடுத்தார்!

—என். வெங்கடராமன்.



### பேஷ்!

முதல் அம்மாமி :— ஏன் அம்மாமி, பானையிலிருக்கும் புளியை யெல்லாம் எடுத்து வெளியே போடறேள்?

இரண்டாவது அம்மாமி :— எங்க ஆத்துக்காரரை யாரோ இன்னைக்குக் கடம் வாசிக்கக் கூப்பிட்டிருக்கிறார்களாம்!

—எஸ். எஸ்.

### முடிவுதானா?

அவர் :— (டாக்டரைப் பாதி வழியில் சந்தித்து) டாக்டர் ஸார்! மத்தியானத்திலிருந்து பையனுக்கு உடம்பு சரியாயில்லை; வருகிறீர்களா?

டாக்டர் :— போங்கள், இதோ வந்து விடுகிறேன், சற்று நேரத்தில் அடுத்த தெருவுக் 'கேஸை' முடித்துவிட்டு!

—ஆர். கே. மூர்த்தி.



### அப்படியா?

எஜமானியம்மாள் (கோபமாக) :— அழகாய்த்தாண்டா இருக்கு, நீ பேசறது! என்னவோ சாதமில்லை, கறியை மாத்திரம் வாங்கிக்கோடாப்பான்னு, என்ன கறின்னு திருப்பிக் கேட்கிறாயே!

பிச்சைக்காரன் :— கோவிச்சுக்காதீங்க, அம்மா!...... இதுமாதிரிதான் அன்னிக்கி எதிர் வீட்டு அம்மா கூப்பிட்டு, சாதமில்லை என்று ஒரு கூடை பாவற்காய்க் கறியை இருட்டிலே போட்டுட்டாங்க!

—கிட்டு.



### பண்ட மாற்று!

புருஷன் :— ஏது, இந்தப் பேரிச்சம் பழம்?

மனைவி :— உங்கள் பெட்டியிலே ரொம்ப நாளாய்க் கிடந்ததே ஒரு சுண்ணாம்புக் காண்டான், அதைப் போட்டு வாங்கினேன்.

புருஷன் :— அடடா! நான் அடிக்கடி அடகு வைக்கும் கைக்கடிகாரம்னு அது!

—சக்கரவர்த்தி.



### பதிலுக்குப் பதில்!

குப்பிப் பாட்டி :— புருஷன் தேடி வைத்த அஞ்சு ஆயிரத்தையும் பேரனுக்குத் தான் அழுதேன். இதோ, நாலு மாசமோ மூணு மாசமோ சாகப் போறேன். பேரன் எனக்கு என்னத்தைச் செய்யப் போறான்?

சுப்புப் பாட்டி :— பயப்படாதே; நீ அவனுக்கு அழுததற்காக அவனும் உனக்கு அழுது விடுவான்!

—தி. கி. கி.



# சந்திர ஹாரம்

ஆசிரியர்: பிரேம்சந்த் | மொழிபெயர்ப்பு: ரா. வீழிநாதன்

## இருபத்தாறாம் அத்தியாயம்

## தடைப்பட்ட பிரயாணம்

ரமாநாத் வந்தது முதல், கிழவன் தேவீதினுக்கு ஆங்கிலம் கற்றுக் கொள்ள வேண்டும் என்ற மோகம் பிறந்து விட்டது. ஆகவே, தினம் பொழுது விடிந்ததும் விடியாததுமாகக் கையில் ஆங்கில அரிச்சுவடியை எடுத்துக் கொண்டு ரமாநாத்திடம் வந்து உட்கார்ந்து விடுவான். அன்று ரமாநாத் எழுந்து பல் துலக்கிக் கொண்டிருக்கும் பொழுதே தேவீதீன் புத்தகமும் கையுமாக அவனிடம் வந்து, "என் அப்பா, உன்னுடைய இந்த இங்கிலீஷ் ரொம்பவும் வேடிக்கையான பாஷையாயிருக்கிறதே! எஸ்-ஐ-ஆர் (S I R) என்றால் 'ஸர்' என்று சொல்ல வேண்டுமாம். ஆனால், பி-ஐ-டி (P I T) என்றால் 'பிட்' என்று சொல்ல வேண்டுமாமே? பி-யு-டி (B U T) என்பது 'பட்' என்று ஆகிறதென்றால், பி-யு-டி (P U T) என்பது 'பட்' என்றுதானே ஆக வேண்டும். ஏன் இப்படி 'புட்' என்று ஆகிவிடுகிறது? உனக்கும் இந்த பாஷையைக் கற்றுக் கொள்ளும் பொழுது சிரமமாகத்தான் இருந்ததோ?" என்று கேட்டான்.

ரமாநாத் புன்முறுவல் புரிந்த வண்ணம், "ஆரம்பத்தில் கொஞ்சம் சிரமமாகத்தானிருந்தது. ஆனால் இப்பொழுது ரொம்ப சுலபமாக இருக்கிறது" என்றான்.

"இந்த அரிச்சுவடி முடிந்து விட்டால் நான் பிள்ளையாருக்கு நூற்றெட்டுக் கொழுக்கட்டை பிடித்துப் படைப்பதாகக் கூட வேண்டிக் கொண்டிருக்கிறேன். வேண்டுமானால் சிதர்த் தேங்காய் உடைக்கக்கூடத் தயார்! ஆனால் அதற்குள் என் மூளையே அல்லவா சிதறிவிடும் போலிருக்கிறது...... ஆமாம், ஊரிலிருந்து காகிதம்—கீகிதம் வருகிறதா?"

"ஊஹூம், வருவதே யில்லை."

"நீயாவது எழுதுவது உண்டா?"

"ஊஹூம், அதுவும் கிடையாது."

"இந்த ஊருக்கு நீ வந்து மூன்று மாதங்களுக்கு மேல் ஆகிவிட்டதே! ஒரு காகிதம் கூட எழுதவில்லை யென்கிறாயே! ஊரில் கவலைப்பட்டுக் கொண்டிருக்க மாட்டார்களா?"

"ஏதாவதொரு வேலை கிடைக்காத வரையில் ஊருக்குக் கடிதம் எழுதுவதாக உத்தேசமில்லை."

"நல்ல ஆள் அப்பா, நீ! வேலை கிடைப்பதற்கும் கடிதம் எழுதுவதற்கும் என்ன சம்பந்தம்? 'நான் இங்கே சுகம், அவ்விடத்துச் சௌக்கியத்துக்குக் கடிதம் எழுதவும்' என்று ஒரு வரி எழுதிப் போட்டால் என்ன? வீட்டில் உள்ளவர்கள் 'என்னவோ, ஏதோ?' என்று கவலைப்

பட்டுக் கொண்டிருப்பார்கள் அல்லவா? ஆமாம், உனக்கு அப்பா அம்மா எல்லாரும் இருக்கிறார்களோ, இல்லையோ?"

"இருக்கிறார்கள்."

"அப்படியானால் நான் சொல்லுவதைக் கேள். தட்டாதே! இன்றைத் தபாலுக்கே ஒரு காகிதம் எழுதிப் போட்டுவிட்டு மறு காரியம் பார்!" என்று தேவீதின் கெஞ்சாத தோஷமாகச் சொன்னான்.

ரமாநாத் இதுவரை தன் விஷயத்தைத் தேவீதினிடம் மனம் விட்டுச் சொல்லியதே இல்லை. அவனிடமும் பொத்திப் பொத்தி மறைத்து வைத்திருந்தான். ரமாநாத் எத்தனையோ தடவை தன் நிலைமையைச் சொல்லித் தேவீதினிடம் ஆலோசனை கேட்க வேண்டும் என்று நினைத்ததுண்டு. ஆனால் சொல்லத்தான் அவனுக்கு நா எழுந்ததில்லை. இன்று தேவீதின் தன்னிடம் காட்டும் நல்லுணர்ச்சியைக் கண்டதும், அவன் மனம், அவனை உந்தித் தள்ளியது. "நான் வீட்டிலிருந்து ஓடி வந்து விட்டேன் அல்லவா! அதனால் தான் யோசிக்கிறேன்" என்று இழுத்தான்.

"அதுதான் அப்பொழுதே சொன்னாயே! — ஆமாம், அப்பாவிடம் ஏதாவது சண்டை-கிண்டை போட்டுக் கொண்டு ஓடி வந்து விட்டாயா, என்ன?"

"இல்லை."

"அம்மா ஏதாவது சொன்னாளோ?"

"அதுவும் இல்லை."

"அப்படியானால் உனக்கும் உன் வீட்டுக்காரிக்கும் ஏதாவது மனஸ்தாபமாகத்தானிருக்க வேண்டும். அவள் தனிக் குடித்தனம் வைக்க வேண்டும் என்று சொல்லியிருப்பாள். நீ அதெல்லாம் முடியாது, அப்பா அம்மாவைப் பிரிந்து தனியாக வாழ்வது சரியல்ல என்று சொல்லியிருப்பாய். இல்லாவிட்டால் இந்த நகை வேண்டும், அந்த நகை வேண்டும் என்று நச்சரித்து உன் உயிரை வாங்கியிருப்பாள். என்ன, நான் சொல்லுவது உண்மைதானே?"

ரமாநாத் வெட்கத்துடன், "அவளை அப்படிப்பட்டவள் என்று சொல்லி விடுவதற்கில்லை. இன்றுவரை அவள் தன் வாயைத் திறந்து தனக்கு இன்ன நகை வேண்டும் என்று சொன்னதில்லை. ஆனால் ஏதாவது வாங்கிக் கொடுத்து விட்டால் மட்டும் அவளுக்குச் சந்தோஷம் தலைகால் தெரியாது. அவளைச் சந்தோஷப்படுத்த எண்ணி நான்தான் முன்பின் யோசிக்காமல் ஒரு அசட்டுத்தனமான காரியத்தில் இறங்கி விட்டேன்" என்றான்.

தேவீதின் தன்னை யறியாமலேயே, "ஒருவேளை நீ சர்க்கார் பணத்தில் கை வைத்து விட்டாயோ என்னமோ!" என்றான்.

இதைக் கேட்டதும் ரமாநாத்தின் உரோமங்கள் சிலிர்த்தன. மார்பு 'படபட' வென்று அடித்துக் கொண்டது. எதிரிகளின் கண்களில் படாமல், அவர்களுடைய கண்களில் மண்ணைத் தூவி, காடு முரடான பாதைகளின் வழியாகவும் மேடு பள்ளங்களின் வழியாகவும் தன் படையை வெகு பத்திரமாகக் கொண்டு போய்ச் சேர்க்க முயலும் கைதேர்ந்த படைத் தலைவனைப்போல ரமாநாத் அந்த ஒரே ஒரு ரகசியத்தை மட்டும் தேவீதினிடம் மூடி வைக்க விரும்பினான். தேவீதின் அந்தக் கேள்வியைக் கேட்டுக் கையும் களவுமாகத் தன்னைப் பிடித்து விட்டது ரமாநாத்துக்குப் பெரிய அதிர்ச்சியை உண்டு பண்ணியது. அந்தச் சமயம் அவன் முகம் போன போக்கைச் சொல்லி முடியாது. தேவீதினின் கேள்விக்கு என்ன பதில் சொல்லுவது என்று அவனால் உடனடியாகத் தீர்மானிக்க முடியவில்லை.

தேவீதின் அவனுடைய மனோபாவத்தை ஒருவாறு புரிந்து கொண்டு சொன்னான்: "இந்தக் காதல் சமாசாரம் ஒரு புதிராய் இருக்கிறதப்பா! பெரிய பெரிய ஆட்களே இதில் விழுந்து தத்தளிக்கிறார்கள் என்றால் உன்னைப் போன்றவர்களைப் பற்றிச் சொல்லவா வேண்டும்? பணமோசடி சம்பந்தமாக எத்தனை வழக்குகள் வருஷா வருஷம் நடக்கின்றன, தெரியுமா? அடிவரையில் விசாரித்துப் பார்த்தால் எல்லாவற்றிற்கும் மூலகாரணம் ஒன்றாகத்தான் இருக்கிறது; அதுதான் நகைப் பிரச்னை. பத்துப் பதினைந்து சம்பவங்களை நான் என் கண்களாலேயே பார்த்திருக்கிறேன். இந்த நகையாசை இருக்கிறதே, இது ரொம்பக் கெட்ட வியாதி, அப்பா! வீட்டுக்காரி, 'இதை எதற்கு வாங்கி வந்தீர்கள்? பணத்துக்கு எங்கே போவது?' என்றெல்லாம் மேலுக்கு நம்மிடம் கேட்பாளே தவிர, உள்ளூற நாம் வாங்கினதைப் பற்றி அவளுக்குப் பரமதிருப்திதான் ஏற்படும். இங்கே ஒரு போஸ்ட்மாஸ்டர் இருந்தார். அவர் தன்னைத் தானே கத்தியால் குத்திக் கொண்டு இறந்தார். சர்க்கார் பணத்தைக்

கையாடியதனால் மற்றொருவருக்கு ஐந்து வருஷம் தண்டனை கிடைத்தது. ஒரு சாஸ்திரியார் விஷத்தைத் தின்று உயிரை விட்டார். இது ரொம்ப ரொம்பக் கெட்ட வியாதி அப்பா!

"பிறரைப் பற்றிச் சொல்லுவானேன், என்னையே எடுத்துக் கொள்ளலாமே! நானும் மூன்று வருஷம் சிறைக் கம்பிகளை எண்ணி யிருக்கிறேன். அப்பொழுது எனக்குக் கல்யாணம் ஆன புதிது. இந்தக் கிழவி அப்பொழுது எப்படி யிருப்பாள் தெரியுமா? நான் அவளுடைய தளுக்கையும் மினுக்கையும் பார்த்து அப்படியே சொக்கிப் போய் விடுவேன். அப்பொழுது நான் தபால்காரன் வேலை பார்த்து வந்தேன். மணியார்டர் கொண்டு போய்க் கொடுப்பது என் வேலை. இவள் 'தோடு வேண்டும், தோடு வேண்டும்' என்று என் உயிரை வாங்கினாள். நான் சும்மா யிருக்கலாம் அல்லவா? அதுதான் இல்லை. 'எனக்கு இத்தனை வரும்படி வருகிறதாக்கும்' என்று வானளாவ என்னைப்பற்றிப் புகழ்ந்து கொண்டிருந்தேன். தினம் பூ, பக்ஷணம், ஸெண்டு என்று ஏதாவது வாங்கிப்போன வண்ணமாயிருந்தேன். நான்தான் எனக்கு ராஜா. என்னை அடக்கி ஆள ஆள் கிடையாது. அப்பொழுதெல்லாம் என் கால பலம் நன்றாயிருந்தது. கடைக்காரர்கள் நான் ஏது கேட்டாலும் கொடுத்து வந்தார்கள். கடைசியில் நான் ஒரு சமயம் மணியார்டரில் பொய்க் கையெழுத்துப் போட்டுப் பணத்தை அமுக்கி விட்டேன். அதிகம் இல்லை, முப்பத்தே முப்பது ரூபாய் தான். காதுக்குத் தோடு வாங்கிக்கொண்டு போனேன். அப்பொழுது அவள் எவ்வளவு சந்தோஷப்பட்டாள், தெரியுமா? அவள் பட்ட சந்தோஷத்தைப் பார்க்க எனக்கும் சந்தோஷம் தாங்கவில்லை.

"ஆனால் ஒரு மாதத்துக் கெல்லாம் திருட்டு வெளிப்பட்டு விட்டது. மூன்று வருஷச் சிறைத் தண்டனை கிடைத்தது. தண்டனை முடிந்து வெளியே வந்ததும் இங்கே ஓடி வந்துவிட்டேன். அதற்கப் புறம் வீட்டுப்பக்கம் தலை காட்டவேயில்லை. ஆனால் கடிதம் மட்டும் எழுதிப் போட்டு விட்டேன். சமாசாரம் தெரிந்ததும் கிழவி இங்கே என்னிடம் வந்து விட்டாள். இவ்வளவு கஷ்டங்கள் அனுபவிக்கும்படி ஆயிற்றே, அப்புறமாவது கிழவி இந்த நகையாசையை விட்டாள் என்கிறாயா? அதுதான் இல்லை. இப்பொழுதும் பார், ஏதாவது நகை செய்த வண்ணமாகத்தான் இருக்கிறாள். இன்றைக்கு ஒன்று செய்வது; நாளைக்கு அதை அழித்து இன்னொரு நகை செய்வது; இதுதான் அவளுடைய வேலை. நல்ல வேளையாக ஒரு தட்டான் காய்கறியைக் கூலியாக வாங்கிக் கொண்டு நகைகள் செய்து கொடுக்கிறான். இல்லா விட்டால், இன்னும் கூலிக்கென்று வேறு செலவழிக்க வேண்டி யிருக்கும் அல்லவா? அது கிடக்கட்டும், நான் சொல்லுவதைக் கேள். இன்றைக்கே வீட்டுக்கு ஒரு காகிதம் எழுதிப்போடு. ஆனால், போலீஸ் உன்னைத் தேடிக் கொண்டிருக்குமே! எங்கேயாவது போலீஸுக்குத் தெரிந்து விட்டால் காரியம் அல்லவா கெட்டுவிடும்? ஆமாம், நான் ஒன்று செய்கிறேனே! வேறு யாரையாவது உன் வீட்டுக்குக் கடிதம் எழுதிப் போட்டு விடச் சொல்லுகிறேனே!"

ரமாநாத் மிகவும் பிடிவாதமாக, "வேண்டவே வேண்டாம், அப்பா! போலீஸிடம் கூட எனக்கு அவ்வளவாகப் பயம் இல்லை. ஆனால், வீட்டுக்காரர்களை நினைத்தால்தான் எனக்கு ஒரே பயமா யிருக்கிறது" என்றான்.

"வீட்டுக்காரர்களிடம் என்ன பயம்! சமாசாரம் தெரிந்ததும் அவர்களே உன்னைப் பார்க்க ஓடி வருகிறார்கள். போலீஸுக்குத் தெரியாமல் இருக்க வேண்டுமே என்றுதான் எனக்கு ரொம்பக் கவலையாக இருக்கிறது."

"நான் தண்டனை அனுபவிக்க வேண்டுமே என்பதற்காகக் கொஞ்சங்கூடப் பயப்படவில்லை. அன்றைக்கு உன்னிடம் இதைச் சொல்லவில்லை போலிருக்கிறது. அன்றொரு நாள் எனக்குத் தெரிந்த ஒரு அம்மாளை இங்கே உள்ள வாசகசாலையில் கண்டேன். எங்கள் வீட்டுக்கு அவள் அடிக்கடி வருவது உண்டு. என் வீட்டுக் காரியும் அவளும் நெருங்கிய சிநேகிதிகள். ஒரு பெரிய வக்கீலின் மனைவி. அவளைக் கண்டதும் எனக்கு உயிரே போய்விடும் போலாகி விட்டது. கடவுளே! அவள் என்னைப் பார்க்காமல் இருக்க வேண்டுமே என்றுகூட வேண்டிக் கொண்டேன். மெதுவாக எழுந்து பின்னாலிருந்த வராந்தாவில் போய் ஒளிந்து கொண்டேன். அந்தச் சமயம் அவளுடன் இரண்டொரு வார்த்தைகள் பேசி யிருந்தால் வீட்டுச் சமாசாரம் பூராவும் தெரிந்திருக்கும். நான் 'என்னைச் சந்தித்ததாகப் பிரஸ்தாபிக்காதே' என்று சொல்லி யிருந்தால் அவள் தன் உயிர் போவதா யிருந்தாலும் சொல்ல

மாட்டான், என் மனைவியிடம் கூடச் சொல்ல மாட்டான். எனக்கு அவன்பேரில் அவ்வளவு நம்பிக்கை உண்டு. ஆனால் எனக்குத்தான் தைரியம் ஏற்படவில்லை. இப்பொழுது அவனைப் பார்க்க வேண்டும் என்றாலும் பார்க்க முடியாது. ஏனென்றால் அவன் எங்கே தங்கி யிருக்கிறான் என்று எனக்குத் தெரியாது.''

''அப்படியானால் நீ அவனுக்கே ஏன் ஒரு கடிதம் எழுதிப் போடக் கூடாது?''

''கடிதம் எழுதுவதா? அந்தக் காரியம் தான் நடக்காது.''

''இந்த மாதிரி எத்தனை நாட்கள்தான் கடிதம் எழுதாம லிருப்பதாக உத்தேசம்?''

''எவ்வளவு நாட்கள் முடியுமோ, அவ்வளவு நாட்கள்.''

''போலீஸ் உன்னைத் தேடிக் கொண்டிருக்கும் என்பதற்காகவா?'' என்று கேட்டவாறே தேவீநின் சிந்தனையில் ஆழ்ந்தான்.

'தேவீநின் இப்படிச் சிந்தனையில் ஆழ்ந்து விட்டதற்குக் காரணம் அவனுக்குப் போலீஸிடம் உள்ள பயமா யிருக்குமோ' என்ற சந்தேகம் ரமாநாத்துக்கு எழுந்தது. ஆகவே, அவன் தேவீநினைப் பார்த்து, ''பகல் வேளைகளில் நான் வெளியே கிளம்புவதே யில்லை. ஏனென்றால் எங்கே உன்னையும் இதில் இழுத்துவிட நேருமோ என்ற பயம்தான். இன்றைக் கில்லாவிட்டால் என்றைக்காவது ஒரு நாள் நான் மாட்டிக் கொள்ளுவது நிச்சயம். உன்னையும் இந்தக் கஷ்டத்திற்கு ஆளாக்குவானேன்? ஆகவே எங்கேயாவது கண்காணாத இடத்துக்கு ஓடிப்போய் விடலாமா என்று யோசித்துக் கொண்டிருக்கிறேன்'' என்றான்.

தேவீநின் வெகு செருக்குடன் தலை நிமிர்த்து, ''என்னைப் பற்றி நீ கவலைப்பட வேண்டியது அனாவசியம். நான் அப்படி ஒன்றும் போலீஸுக்குப் பயந்து சாகிறவ னில்லை. அயலூர்க்காரனுக்குத் தங்கு வதற்கு இடம் கொடுப்பதனால் ஒன்றும் பெரிய குற்றம் ஏற்பட்டுவிடாது. போலீஸ் 'யார் யாரை யெல்லாம் தேடுகிறது' என்று எனக்கென்ன ஜோஸியமா தெரியும்? இதைப்பற்றி யெல்லாம் விசாரித்துத் தெரிந்து கொள்ளுவதற்கு நான் என்ன போலீஸின் கையாளா? நீ உன்னைக் காப் பாற்றிக் கொள்ளப் பார். அப்புறம், கடவுள் விட்ட வழி விடட்டும். ஆனால் ஜாக்கிரதை!



கிழவியிடம் மறந்து போய்க் கூட இதைப் பற்றிப் பேசிவிடாதே! ஏனென்றால் அவளுடைய வாயில் எதுவுமே தங்குவதில்லை" என்றான்.

பிறகு இருவரும் சிறிது நேரம் பேசாமல் இருந்தனர். பின்னர், "ஏன் அப்பா, இப்படிச் செய்தால் என்ன! நான் வேண்டுமானால் உன் வீட்டுக்கு ஒரு நடை போய் விட்டு வருகிறேனே! காதோடு காது வைத்தாற் போல எல்லாச் செய்திகளையும் விசாரித்துக் கொண்டு வந்து விடுகிறேன். உன் அப்பா, அம்மா, பெண்சாதி எல்லாரை யுமே கண்டு பேசி வருகிறேன்" என்றான்.

ரமாகாந் மனதுக்குள்ளாகப் பூரித்தவனாய், "எப்படியப்பா விசாரித்துக்கொண்டு வருவாய்? 'உனக்கும் இதற்கும் என்ன சம்பந்தம்?' என்று யாராவது கேட்டால் நீ என்ன பதில் சொல்லுவாய்?" என்று கேட்டான்.

தேவீதீன் 'கட கட' வென்று சிரித்துக் கொண்டே, "அதெல்லாம் நான் வெகு கெட்டிக்காரத்தனமாகச் சமாளித்து விடுவேனாக்கும்! கடையில் இரண்டணாக் காசை விட்டெறிந்து ஒரு பூணூலை வாங்கிப் போட்டுக் கொண்டு பிராமணனாக மாறி விட்டால் போயிற்று! அப்புறம் எந்தக் காரியத்தைத்தான் சாதிக்க முடியாது? ரேகை பார்க்கலாம்; ஜாதகம் பார்க்கலாம்; ஜோஸியம் சொல்லலாம்; எது வேண்டுமானாலும் செய்யலாம். உன் தாயார் எனக்குப் பிச்சை போட அரிசியைக் கையில் எடுத்துக் கொண்டு வருவாள். நான் அவளைப் பார்த்ததும், 'அம்மா, உன் பிள்ளை ஊரை விட்டு ஓடிவிட்டான். அதனால் நீ ரொம்ப மனவருத்தப்படுகிறாய். உண்மைதானே?' என்று கேட்பேன். இதைக் கேட்டதும் வீட்டில் உள்ள அத்தனை பேரும் ஓடோடியும் வருவார்கள். உன் பெண்சாதியும் வருவாள். அவள் கையைப் பார்த்து ரேகை சாஸ்திரம் சொல்லுவேன். இந்த விஷயங்களில் என்னை யாரும் மிஞ்சி விட முடியாது. நீ ஒன்றுக்கும் கவலைப் படாதே! கொஞ்சம் சம்பாதித்துக் கொண்டு கூட வந்து விடுகிறேன், பாரேன்! மாசி மகத்துக்கும் போனது போலிருக்கும். அப்படியே ஸ்நானமும் செய்துவிட்டு வந்து விடுவேன்!" என்றான்.

ரமாகாந்தின் கண்கள் விரிந்தன. அவனுடைய மனம் இன்பக் கனவுகளில் லயித்தது. உடனே பத்மா ரத்தனைக் கூப்பிட்டு வருவதற்காக ஓடினாள். இருவரும் சேர்ந்து கொண்டு, 'அவர் எங்கே யிருக்கிறார்? சௌக்கியமாயிருக்கிறாரா? வீட்டுக்கு எப்பொழுது வருவார்? வீட்டு ஞாபகம் அவருக்கு எப்பொழுதாவது வருகிறதா? அல்லது யாராவது ஆசைக் கிழத்தியின் வலையில் மாட்டிக் கொண்டு விட்டாரா? எந்த ஊரில் இப்பொழுது இருக்கிறார்?' என்றெல்லாம் வித விதமான கேள்விகளைக் கேட்டுத் தேவீதீனைத் திக்குமுக்காட வைத்துவிடுவார்கள். அப்பா கஜானாவில் பணத்தைக் கட்டியிருந்தானால், அவன் பாடு கொண்டாட்டம் தான். ஆனால், அப்புறமும் எல்லாருடைய முகத்திலும் எப்படி விழிக்கிறது? இது ஒன்று தான் அவனுக்குத் தீராத கவலையை விளைவித்தது.

ரமாகாந் இப்படிக் கற்பனையில் ஆழ்ந்திருக்கும்பொழுதே தேவீதீன் குறுக்கிட்டு, "எப்படி அப்பா, என் யோசனை?" என்றான்.

"இந்தத் தள்ளாத வயதுக் காலத்தில், உனக்கு எதற்கப்பா இந்தக் கஷ்டங்களெல்லாம்?"

"மாசி மக ஸ்நானமும் செய்வேன் அல்லவா? கஷ்டப்படாமல் புண்ணியம் கிடைக்குமா? என்னைக் கேட்டால் 'நீயும் வந்தால் சௌகரியமாயிருக்கும்' என்று தோன்றுகிறது. நான் முன்னால் போய் விஷயத்தை விசாரித்துக் கொண்டு வருகிறேன். உனக்குக் கெடுதல் நேராது என்று தோன்றினால் குஷியாக நீ வீட்டுக்குப் போ! அபாயம் ஏதாவது இருக்கும் போலத் தோன்றினால் போன சுவடு வந்த சுவடு தெரியாமல் திரும்பி வந்து விடுவோம்."

ரமாகாந் சிரித்துக் கொண்டே, "போகாத ஊருக்கு வழி சொல்லி என்ன பிரயோசனம்? நான் வரத் தயாராயில்லை. அப்படியே நான் வருகிறேன் என்றே வைத்துக் கொள், ஸ்டேஷனில் இறங்கியதும் இறங்காததுமாகப் போலீஸ் என்னைப் பிடித்துக் கொண்டு விட்டால்?" என்று சந்தேகத்தைக் கிளப்பினான்.

தேவீதீன் வெகு கம்பீரமான குரலில், "இந்தத் தேவீதீன் அழைத்துக் கொண்டு போகும்பொழுது போலீஸாவது, பிடித்துக் கொள்ளவாவது? நீ சொல்லுவது வேடிக்கையாயிருக்கிறதே! நானே வேண்டுமானாலும் உன்னைப் பிரயாகை போலீஸ் ஸ்டேஷனில் கொண்டு போய் நிறுத்துகிறேன். உன்னை எவனாவது சந்தேகக் கண் கொண்டு

பார்த்தால் நீ என் பெயரை மாற்றி வை. இந்தக் கல்கத்தாவில் எனக்குத் தெரிந்து எத்தனையோ கொலைகாரர்கள் இருக்கிறார்கள். அவர்கள் பெரிய பெரிய போலீஸ் ஆபீஸர்களுடன் உட்கார்ந்து விருந்து சாப்பிடுகிறார்கள். போலீஸ்காரர்களுக்கு 'அவர்கள்தான் குற்றவாளிகள்' என்பதும் தெரியும். இருந்தாலும் போலீஸினால் அவர்களை ஒன்றும் செய்ய முடிவதில்லை. பணம் பத்தும் செய்யும், பணத்தின் மகிமையே தனியாக்கும்!'' என்றான்.

ரமாநாத் ஒன்றுமே பதில் சொல்லவில்லை. எந்த விஷயங்களை அவன் மிகவும் கஷ்ட சாத்தியமானவை என்று எண்ணியிருந்தானோ, அவற்றையெல்லாம் கிழவன் ஒரே நொடியில் ஒன்றுமில்லாதவை என்று சாதித்து விட்டான். அப்படிச் சாதித்த அந்தக் கிழவன் வெறும் வாய்ப்பேச்சில் மட்டும் வீரன் அல்ல; தான் சொன்ன சொல்லை நிறைவேற்றிக் காட்டும் ஆற்றல் அவனிடம் இருந்தது. ஆகவே ரமாநாத், 'கிழவனுடன் வீட்டுக்குப் போவதா, வேண்டாமா?' என்ற யோசனையில் ஆழ்ந்தான். 'கையில் கொஞ்சம் பணம் இருந்தால் 'ஜில்'லென்று புது உடைகள் தைத்துக் கொண்டு 'குஷி'யாகப் போகலாமே!' என்ற எண்ணம் அதற்குமேல் எழுந்தது. அடுத்தபடியாக அவனுடைய மனத்தில் அலைக்குமேல் அலைபோலக் கற்பனைகள் உதித்தன.

வண்டியிலிருந்து இறங்கியதும் கோபியும் விசுவரும், 'அண்ணா வந்து விட்டான், அண்ணா வந்து விட்டான்!' என்று கொம்மாளம் போட்டுக் கொண்டு உள்ளே ஓடிப் போய்ச் சொல்லுவார்கள். அப்பா எழுந்து வந்து வெளியே எட்டிப் பார்ப்பார். அம்மாவுக்கு முதலில் அவர்களுடைய சொல்லில் நம்பிக்கை எழாது. அப்பா உள்ளே போய், 'நிஜம்தான், அவன் வந்து விட்டான்' என்று சொன்ன பிறகு தான் அவளுக்கு நம்பிக்கை ஏற்படும். அவள் கண்களில் நீர் துளிக்க என்னைப் பார்ப்பதற்காக வாசற் பக்கம் வருவாள். உடனே நான் ஓட்டமாய் ஓடி அவளுடைய காலடிகளில் விழுவேன். ஆனால் பத்மா தான் என்மீது ஒரேயடியாய்க் கோபித்துக் கொண்டு 'உம்மணா மூஞ்சி' மாதிரி வீட்டுக் குள்ளேயே அடைந்து கிடப்பாள்' என்றெல்லாம் எண்ணிய ரமாநாத் பத்மாவைத் தேற்றுவதற்கான சில வாக்கியங்களையும் மனதில் உருப்போட்டுக் கொண்டான்.

வீட்டுக்குப் போன பின்னர், பணத்தைப் பற்றிய பேச்சே எழாது. யாருமே பணப் பேச்சை எடுக்க அஞ்சுவார்கள் என்றும் அவன் எண்ணினான். ஏனெனில், நமக்கு மிகவும் வேண்டியவர்கள் யாராவது ஒரு குற்றம் செய்து விட்டால், நாம் அதை நாலு பேருக்கு நடுவிலோ, தனிமையிலோ சொல்லிக் காட்டி அவர்களுடைய மனதுக்கு வருத்தத்தை உண்டுபண்ண விரும்புவதில்லை. அவர்களுக்கு அந்தக் குற்றத்தின் நினைவே எழாமல் இருக்கும் வகையிலும், நாம் அவர்களை அவமதிப்பதாகத் தப்பர்த்தம் செய்து கொள்ள முடியாத வகையிலும்தானே நாம் நடந்துகொள்ள முயற்சிக்கிறோம்? அவன் அந்தத் தைரியத்தில்தான் அப்படி எண்ணினான்.

''என்ன யோசிக்கிறாய்? வருகிறாய் அல்லவா?'' என்று தேவீதீன் அவனுடைய சிந்தனையைக் கலைத்துக் கேட்டான்.

ரமாநாத் மிகவும் அடக்கமான குரலில், ''நீ இவ்வளவு பெரிய மனது வைத்துச் சொல்லும்பொழுது நான் எப்படி மறுக்க முடியும்? ஆனால் ஒன்று; முதலில் நீ வீட்டுக்குப் போய் சமாசாரம் பூராவையும் தெரிந்து கொண்டு வரவேண்டும். என் மனதுக்குப் பிடிக்கவில்லையென்றால் உடனே திரும்பி வந்து விடுவேன்'' என்றான்.

தேவீதீன் திடமான குரலில், ''எனக்குப் பூர்ண சம்மதம்'' என்றான்.

ரமாநாத் சங்கோசத்துடன் தலை குனிந்து கொண்டே, ''இன்னுமொரு விஷயம்'' என்றான்.

''என்ன, சொல்லு!''

''எனக்குக் கொஞ்சம் 'டிரஸ்' தைத்துக் கொள்ள வேண்டும்.''

''ஓ! பேஷாய்த் தைத்துக் கொள்ளு!''

''நான் ஊருக்குப் போன பிறகுதான் உனக்குப் பணம் தருவேன்.''

''சரி, நானும் அங்கே வந்த பின் உனக்குக் குரு தட்சிணை தருகிறேன்.''

''குரு தட்சிணையா? எதற்காக?''

''இந்தக் கோணல் எழுத்துச் சொல்லிக் கொடுத்தாயே, அதற்காகத்தான்.''

''நன்றாயிருக்கிறது. நான் அல்லவா உனக்குக் குரு தட்சிணை தர வேண்டும்! அந்த நாலு கோணல் எழுத்துச் சொல்லிக் கொடுத்து விட்டதனால் உனக்கு என்ன பிரயோசனம்? நீ எனக்குச் சொல்லிக்

கொடுத்திருக்கும் பாடங்களை நான் என் ஆயுள் பூராவும் மறக்க முடியாது. உன்னைப் பற்றி உன்னையே நேரில் வைத்துக் கொண்டு சொன்னால் அது முகஸ்துதியாகிவிடும். ஆனால் உண்மையாகச் சொல்லுகிறேன், அப்பா அம்மாவுக்கு அடுத்தபடியாக என் மனதில் நீதான் இடம் பெற்றிருக்கிறாய். நான் கட்டாற்றில் விழுந்து மிதந்து கொண்டு தத்தளித்த பொழுது, நீதான் எனக்குக் கைகொடுத்துக் கரையேற்றினாய். நீ அன்று காப்பாற்றி யிரா விட்டால் என் நிலைமை என்ன ஆகியிருக்குமோ? கடவுளுக்குத்தான் தெரியும்" என்றான் ரமாநாத்.

தேவீதின் கண்களைச் சிமிட்டிக் கொண்டு விளையாட்டாக, "நீ இப்படியெல்லாம் பேசுகிறாய். உன் அப்பா, என்னை உன் வீட்டில் காலடியே எடுத்து வைக்க விட மாட்டார்......!" என்றான்.

ரமாநாத் சிரித்துக் கொண்டே, "அப்படி எண்ணாதே! அப்பா உன்னைத் தம் தமையனாகப் பாவித்து, 'போதும், போதும்' என்று சொல்லும்படி உனக்கு மரியாதைகள் செய்வார். பத்மா உனக்கு வேண்டிய சிசுருஷைகள் எல்லாம் செய்வாள். கொஞ்ச நாட்களில் உனக்கு வாலிபம்கூடத் திரும்பி விடும், பாரேன்!" என்றான்.

தேவீதின் சிரித்துக் கொண்டே, "அப்படியானால் கிழவி பொறுமையினால் வெந்து சாம்பலாகி விடுவாள். எனக்கு ஒன்று தோன்றுகிறது. இந்தக் குடிசையோடு உன்னுடன் பிரயாகைக்குக் குடிவந்து விட்டால், இன்னும் கொஞ்ச நஞ்சம் பாக்கியிருக்கும் நாட்களை உங்களுடன் ஆனந்தமாகக் கழிக்கலாம் அல்லவா? ஆனால் இந்தக் கிழவி கேட்க மாட்டாள். கல்கத்தாவை விட்டு வருவதென்றால் அவளுக்கு உயிரே போய் விடும் — அது கிடக்கட்டும், நாம் இருவரும் புறப்படுவது நிச்சயம்தானே?" என்று கேட்டான்.

"ஏன்? இன்னும் உனக்கு என் வார்த்தையில் நம்பிக்கை விழவில்லையா?"

"சரி, அப்படியானால் கடை திறந்ததும் துணி வாங்கப் போவோம். அப்படியே தைக்கவும் கொடுத்து விட்டு வந்து விடுவோம், என்ன?" என்று சொல்லிவிட்டுத் தேவீதின் அங்கிருந்து எழுந்து சென்றான்.

தேவீதின் சென்றதும், ரமாநாத் நேரம் போவதே தெரியாமல் வெகு நேரம்வரை இன்பக் கற்பனைகளில் லயித்து விட்டான். கல்கத்தாவுக்கு வந்த பிறகு அவன் தன் மனத்தில் இம்மாதிரிக் கற்பனைகளுக்கு இடம் கொடுத்ததே யில்லை. கற்பனையென்னும் கடலோ ஆழமும், விஸ்தாரமும், இழுப்பும் வாய்ந்தது. அதில் ஆழம் தெரியாமல் காலை விட்டால் 'தன் கதி என்ன ஆகுமோ?' என்று அவனுக்கு உள்ளூறத் திகில். ஆகவே, அவன் தன் சஞ்சலம் வாய்ந்த மனதை வெகு பிரயாசையுடன் கட்டியாள முயற்சித்தான். ஆனால் இன்று தனக்குப் பக்கபலமாக ஒரு தோணி கிடைத்து விடவே வெகு தைரியமாகத் தன் மனதை அதில் இறக்கி இஷ்டப்படி விளையாட விட்டு விட்டான். தேவீதினுடைய தயவு இருக்கும்பொழுது அவன் பயப்படுவானேன்? திரிவேணியில் தானும் பத்மாவும் நடத்திய உல்லாசப் பிரயாணம், 'ஆல்பிரெட் பார்க்'கின் அழகு, 'குஸ்ரோபாக்'கின் கொண்டாட்டம், நண்பர்களுடைய அரட்டை முதலியன ஒவ்வொன்றாக நினைவுக்கு வந்து அவனுடைய மனத்துக்கு ஒரு தனி இன்பத்தைக் கொடுத்தன. ரமேஷ் பாபு அவனைக் கண்டதும் அப்படியே ஓடி வந்து அவனை அணைத்துக் கொள்ளுவார். நண்பர்கள் 'எங்கேயப்பா போய் விட்டாய்? எங்களிடம்கூடச் சொல்லவில்லையே? எங்கு எங்கெல்லாம் போயிருந்தாய்?' என்று குசலப் பிரச்னம் விசாரிப்பார்கள். ரத்தன் ஓடோடியும் வந்து, 'நீங்கள் கல்கத்தாவில் எங்கே தங்கி யிருந்தீர்கள்? நான் ஊர் பூராவும் உங்களைச் சல்லடை போட்டுச் சலித்துப் பார்த்தேனே! அகப்படக் காணோமே!' என்பாள்!

இப்படியெல்லாம் கற்பனை செய்த அவனுடைய மனத் திரையில், முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடிக்க நின்று கொண்டிருக்கும் பத்மாவின் உருவம் காட்சி யளித்தது.

இதே சமயம் தேவீதின் அங்கே வந்து, "தம்பீ, மணி பத்தடித்து விட்டது. கடைத்தெருவுக்குப் போய்விட்டு வந்துவிடுவோம். வாயேன்!" என்று அழைத்தான்.

ரமாநாத் திடுக்கிட்டு "என்ன? பத்து அடித்து விட்டதா?" என்று கேட்டான்.

"பத்து அடித்து எத்தனையோ நாழிகையாகி விட்டது. புறப்படு, சீக்கிரம்!" என்று தேவீதின் அவசரப் படுத்தினான்.

ரமாநாத் எழுந்து கடைக்குப் போவதென்று வாசல் வரை வந்தான். ஆனால் வாசற்படிக்கு வந்ததும் ஏதோ யோசனையில் ஆழ்ந்து மேலே அடி எடுத்து வைக்க ஓடாமல் நின்று விட்டான். (தொடரும்)




# Policy

WORLD WIDE POLICY NO. 558

# ஒரே ஒரு பிரீமியம்

## உங்கள் வருங்காலத்திய எழுதும் நிலைமையின் முன்னேற்றத்தை இன்ஷ்யூர் செய்கிறது.

. . . ஏனென்றால் மென்ட்மோர் ஆட்டோப்ளோ பேனா இந்தியாவின் சீதோஷ்ண நிலையைத் தாங்கக்கூடிய பொருள்களால் விசேஷமாக செய்யப்பட்டது. ட்ராப் - பில்லிங், லிவர், பட்டன் - பில்லிங் முதலிய மாடல்களில் கிடைக்கிறது. அதனுடைய கெட்டியான நிப் 14 காரட் தங்கத்தால் செய்யப்பட்டது. ஆஸ்மி இரிடியத்தில் தோய்க்கப்பட்ட முனையோடுகூடியது. ஒவ்வொரு பேனா குழலின்மேலும் நிப் பின்மேலும் மென்ட்மோர் என்ற பெயர் செதுக்கப்பட்டிருக்கிறதா என்று கவனித்துப் பாருங்கள். உங்கள் ஆயுள்கால சேவையின் அஷ்யூரன்ஸ்.

ரூ. 15!

இங்கிலாந்தில் செய்யப்பட்டது.

# MENTMORE

*Auto-Flow*

மென்ட்மோர் ஆட்டோப்ளோ. FOUNTAIN PEN

வர்த்தக விசாரணைகளுக்கு உரிமைபெற்ற முழு வினியோகஸ்தர்கள்:-
முல்லர் அன்டு பிப்ஸ் (இந்தியா) லிட்., தபால்பெட்டி நெ. 773, பம்பாய்.

No. 3.

